*Te<u>n</u><u>r</u>al*

*Malar 4, ita<u>l</u> 5*

*August 03, 1957*

Record no. 947

தென்றல்

மலர் 4 :: 3-8-57—சனி :: இதழ் 5

தென்றல்

விலை 16 காசு :: வெளிநாடு 24 காசு :: ஆண்டுச் சந்தா ரூ. 7-50

# தென்றல்

ஆசிரியர்: கண்ணதாசன்

# கவிதையிலே காளான்கள்: புதுமைப் பித்தன்

## வசனமுமல்ல; கவிதையுமல்ல; சத்திரசிகிச்சை!

எப்படியோ ஒரு நல்ல சிறுகதை ஆசிரியர் என்று சிலரிடத்தில் பெயரெடுத்தவர் **புதுமைப் பித்தன்**. அவரது சிறு கதைகளைப் படிக்கும் பொழுது, அந்தக் கதைகளில் எந்தப் பிரச்சினையை முற்றுப் பெற வைத்திருக்கிறார் என்று கண்டுபிடிப்பது கடினம். குழந்தை கிழித்த கோடுகள் போலத் தோன்றும் அவரது கதைகளில், சிலர் 'அறையும் ஆடரங்கும்' கண்டுபிடித்து நமக்குச் சொல்கிறார்கள். அவர்கள் சொல்லுகிற முறைதான் புதுமைப்பித்தனின் கதைகளைக் காட்டிலும் வேடிக்கையாக இருக்கிறது. ஒன்றிரண்டு கதைகளைத் தவிர, மற்றவற்றில் வடிவமோ தெளிவோ இல்லை. நெல்லை வாசிகளைத் தவிர மற்றெவரும் புரிந்துகொள்ளவும் முடியவில்லை. என்றாலும், சிறு கதை இலக்கியத்திற்குப் புதுவழி வகுத்தவர் என்று சிலர் சொல்லிக் கொள்ளுகிறார்கள். ஒரு வேளை, பெரும்பான்மையான மக்களுக்குப் புரியாத வழியே புது வழியாக இருக்கலாம்.

கதைகள் போகட்டும்! அவர் எழுதியதாகச் சில கவிதைகள் (?) நூல் வடிவில் வந்திருக்கின்றன. அந்த நூலுக்கு ஒரு 'மேதை' 24 பக்கங்கள் முன்னுரை எழுதியிருக்கிறார். நூலிலே கால்பாகம் இந்த முன்னுரை. பிணத்துக்கு மணம் செய்து வைக்க நினைக்கும் தரகனின் வாதம்போல், அந்த முன்னுரை, குழறுபடிகளைக் கவிதை என்று சாதிக்க முயலுகிறது. ஏற்கனவே உள்ள இலக்கணங்களெல்லாம் எவ்வளவு புதுமுறையில் மாற்றப்பெற்றிருக்கின்றன என்பதை, முன்னுரையாளர் பத்தி பத்தியாகப் பிய்த்துப் போடுகிறார். முன்னுரையைப் படிக்கும்போது, கவிதை எழுதியதாகக் கூறப்படும் புதுமைப்பித்தனை விட்டு விட்டு, இந்த முன்னுரையாளரிடம் அனுதாபப் படத்தோன்றுகிறது. சீர் அமைதியும், யாப்பிலக்கண ஒழுங்கும், தாள ஒற்றுமையும், பாவ சுகமும் கிஞ்சித்தும் காணப்பெறாத இந்தக் கவிதைகளை வசன கவிதைகள் என்று சிலர் அழைத்தார்கள். இந்த முன்னுரையாளர் அதுவும் தவறென்று கூறி, 'இது கவிதையே கவிதை' என்று சாதிக்கிறார்.

தமிழ்க் கவிதைகளுக்கு நிலையான இலக்கண மரபு உண்டு. அந்த இலக்கண மரபு, இயற்கையான ஓசை வழியையே அடிப்படையாகக் கொண்டது. யாப்பிலக்கணமே தெரியாத ஒருவன், அந்த முறைக்குக் கட்டுப்பட்ட ஒரு கவிதையை ஆக்கிவிட முடியும். தாள ஒழுங்கும், ஓசை முறையும், வலியில்லாமல் விழுந்தால் பெரும்பாலும் தமிழ்க் கவிதை, தமிழ் இலக்கண மரபுக்குக் கட்டுப்பட்டு விடுகிறது. இந்தத் தாளத்தை ஒட்டித்தான் தமிழ் இலக்கணம் யாப்பு முறையை ஓரளவு தளர்த்தியும் கொடுத்திருக்கிறது. தமிழ் படித்து, இசை ஞானமும் கைவரப் பெற்ற ஒருவன், வம்பில்லாமல் வலியில்லாமல் விருத்தம்பாடி விட முடியும். அதன்றியும், புது முறையிலே கவிதையாக்கவும் முடியும். பாரதியின் பாடல்கள் கவிதைகள் என்றுதான் கூறப் பெறுகின்றன. அந்தக் கவிதைகள், தமிழ் இலக்கணத்தின் தாள மரபை மட்டும் அடிப்படையாகக் கொண்டு, புதிய புதிய வழிகளை வகுத்திருக்கின்றன. வகுக்கப்பட்ட இந்த முறை, நிலையும் கட்டுப்பாடும் மிக்க இலக்கண மரபிலிருந்து மாறுபட்டாலும் தவறென்று கூறிவிட முடியவில்லை. காரணம், பாரதியின் கவிதைகளில் தாளசுகம் இருக்கிறது. யாப்பு அமைதி இருக்கிறது. சீர்ச் சிறப்பு இருக்கிறது. குறிப்பிட்ட கட்டுக்கோப்புக்குள் முடிவு பெறும் தெளிவு இருக்கிறது. இசைச் சந்தம் கவிதை மரபுக்கு ஒத்து வருகிறது. ஆசிரியப் பாவை நீட்டியும் கலி வெண்பாவில் தனிச் சீர் கோடிட்டு வராமலும் முற்றி, முடித்து, முறையாக எடுத்து, பாரதி எழுதியுள்ள சில கவிதைகள், நிலையான தமிழ் இலக்கணத்திற்கு, முறையான புது வழியை வகுத்திருக்கின்றன. பாரதி எழுதிய நொண்டிச் சிந்து கூட யாப்பிலக்கண முறைக்குக் கட்டுப்படுகிறது. எதுகையும் மோனையும் தப்பாமல், தவறாமல் விழுகின்றன. ஓசை நயம் கவிதைகளுக்கு உணர்ச்சி யூட்டுகிறது. இத்தகு காரணங்களால், மாறுபட்ட இலக்கணங்கூட முரண்படாமல் அமைதி பெறுகிறது.

ஆனால், புதுமைப் பித்தன் பெயரால் வெளிவந்துள்ள சில 'கவிதைகள்' யாப்பிலக்கண முறையையும் மாற்றி, தாளக் கட்டையும் குலைத்து, ஓசை அமைதியையும் கெடுத்து, சீர் நிலையையும் சிதைத்து, அவரே சொன்னது போல் 'குடுகுடுப்பைக்காரன் சட்டைமாதிரி'க் காட்சியளிக்கின்றன. கலி வெண்பா மாதிரி பாரதி பாணியில் "நிஜந்தானோ சொப்பனமோ?" என்றொரு 'கவிதை' இந்த நூலில் இருக்கிறது.

> பட்டமரம் தழைக்க,
> பைரவியார் சன்னிதியில்
> வெட்டெருமை துள்ள,
> விளக்கெடுக்க,
> வட்டமுலை மின்னார்
> வசமிழந்த கரமத்தால்
> .........................

என்று அது தொடருகிறது. இதைக் கலி வெண்பாத் தொடராகவோ, அல்லது தனிச்சீர்தனித்து வராத பாரதி பாணியாகவோ — இரண்டில் ஒன்றாகக் கருதிப் பார்ப்பதானாலும், இரண்டுக்கும் முரண்படுகிறது. தனிச் சீர் நிறைவு பெறவேண்டிய இடம் காலியாகவே இருக்கிறது. சாதாரணமாகப் படித்துப் பார்க்கும் போதே குறை தட்டுகிறது. ஏதோ இருந்திருந்தால் நன்றாய் இருக்குமே என்று தோன்றுகிறது. அது இல்லை; 'இல்லாவிட்டாலும் இது கவிதைதான்' என்கிறார் முன்னுரையாளர்! ஒரு சீர் குறைகிற காரணத்தால் பின்வரும் வரிகளெல்லாம் பிழைபடுகின்றன. 'சீர்கெட்ட' கவிதை, தாளங்கெட்டு, நயங்கெட்டு, சுகங்கெட்டுச் சுவை கெட்டுப் போகும் என்பதற்கு இது ஒரு உதாரணம்! இந்த உதாரணம் நூல் முழுக்க வருகிறது. கவிதை தொடங்கும் முதற் பக்கத்தில் புதுமைப் பித்தன் சொன்னதாகச் சில வரிகளைப் போட்டிருக்கிறார்கள். அதில், அவர், "யாப்பிலக்கண விதிகளைக் கவனித்து, வார்த்தைகளைக் கோர்த்து அமைத்து விட்டால் கவி ஆகுமா? கவிதையின் லட்சணங்கள் என்ன? கவிதைக்குப் பல அம்சங்கள் உண்டு. அவைகளின் கூட்டுறவு மட்டும் கவிதையை உண்டாக்கி விடாது. கவிதையின் முக்கிய பாகம் அதன் ஜீவசக்தி. அது கவிஞனது உள்மனத்தின் உணர்ச்சி உத்வேகத்தைப் பொறுத்துத்தான் இருக்கிறது" என்கிறார்.

கவிஞனது உணர்ச்சி வேகத்தைப் பொறுத்துத்தான் கவிதை என்கிறார். நியாயம்! ஆனால், அந்த உணர்ச்சி வேகம், அதே பாவத்தில் எப்போது வெளியாகிறது? தாளக் கட்டுக்கோப்பு எப்போது சரியாகிறதோ, அப்போதுதான் வெளியாகிறது. இல்லையென்றால், ஊமையன் தான் கண்ட

— 5-ம் பக்கம் —

**கண்ணதாசன்**

# வாழும் மொழியில் வாழா மொழி!

பன்மொழிப் புலவர் கா. அப்பாதுரை, எம்.ஏ., எல்.டி.

## 2

**த**மிழ் வாழும் மொழி. வாழும் மொழிகளின் பல தலைமுறைகளைக் கண்டும் இன்னும் உயிர்ப் பாற்றலும் இளமை நலமும் தளராத மொழி. அது எல்லா உலக மொழிகளுக்கும் முற்பட்டதாய், பல மொழிகளையும், மொழித் தலைமுறைகளையும், நாகரிகங்களையும், நாகரிகத் தலைமுறைகளையும் தோற்றுவித்து, அம்மொழிகளின் வாழ்வுகளையெல்லாம், அம்மொழித் தலைமுறைகளின் வாழ்வுகளையெல்லாம் கடந்துநின்று நிலவுகின்றது. அதற்கொப்பாகப் பல்லாயிரக்கணக்கான ஆண்டுகள் நீடித்த கலை, இலக்கிய, இலக்கண, நாகரிகப் பெருவாழ்வுடைய மொழி உலகில் வேறு எதுவும் இல்லை. இந்த இறவா வாழ்வு, தளரா இளமை, மொழித் தாய்மை ஆகியவை கருதியே தமிழைக் கன்னித்தாய் மொழி என்றும் ஓவா மூவா முதன் மொழி என்றும் பாராட்டுவர் அறிஞர். அதுவே முக்காலத்துக்கும் உரிய மொழி என்றுகூடக் கூறலாம். ஏனெனில் அது இறந்த காலத்தின் கருவிலிருந்து நிகழ்காலத்துக்கு ஒரு பாலமாய், நிகழ்காலங் கடந்து வருங் காலஉலக நோக்கித் தளராது முன்னேறும் மனித இனத்தின் உயர் நாகரிகப் பெரும்பாதையாக அமைந்துள்ளது. இச்சிறப்பு வடமொழிக்கோ வேறு எந்த உலக மொழிக்கோ உரியதாகாது.

தமிழ், வாழும் மொழி மட்டுமல்ல. வாழ்வளிக்கும் மொழி. அது தன் இனமொழிகளுக்கும் தன்னுடன் தொடர்புடைய மொழியினங்களுக்கும் பழம் பெருமை, கலை நாகரிக வளம், நீடித்த வாழ்வு ஆகியவற்றை அளித்துள்ளது. அதன் பழய இனத்தொடர்பு, வரலாற்றுத் தொடர்பு ஆகியவற்றின் காரணமாகவோ, உலகில் வட ஆரிய மொழிகளாகிய செல்த்திய, ஜெர்மானிய மொழிக் குழுக்களைக் கடந்து தென் ஆரிய மொழிகளாகிய இலத்தினம், கிரேக்கம், வடமொழி ஆகியவை ஆயிரக்கணக்கான ஆண்டுகள் முற்பட்ட பொலிவுடையனவாய்த் திகழ்ந்தன. அதே தொடர்பு காரணமாகவே, வட இந்தியத் தாய்மொழிகளின் புத்தணிமைக்காலச் சிறுவாழ்வு கடந்து தென்னக மொழிகள் ஆயிரக்கணக்கான ஆண்டு பழமையும் நீடித்த இலக்கிய வாழ்வும் பெற்றுள்ளன.

வாழா மொழி, வாழ்வளிக்கும் மொழி என்ற இந்த இரண்டு வகையிலும் தமிழுக்கு நேர்மாறான இயல்புடையது வடமொழி. அது பிறக்கும்போதே உயிர்ப்பாற்றலற்ற மொழியாகப் பிறந்தது. அதன் இலக்கிய வாழ்வுகூட ஒரு நான்கு நூற்றாண்டுகளே உயிர் வளர்ச்சி பெற்றிருந்தது. அதற்கு முற்பட்ட அதன் தாய்மொழிகளான வேத மொழி, பாளி ஆகிய முன் தலைமுறைகளும் அதற்குப் பிற்பட்ட பாகதங்கள், அப்பிரும்சங்கள், தற்காலத் தாய்மொழிகள் ஆகிய பின் தலைமுறைகளும் எவையும் இருநூறு ஆண்டுகளுக்கு மேற்பட்ட வாழ்வுடையனவாய் இயங்கவில்லை. இங்ஙனம் வடமொழியின் மரபும் தொடர்பும் கலப்பும் ஒவ்வொரு படியிலும் அம்மரபுக்கோ, தொடர்புக்கோ, கலப்புக்கோ உரிய மொழிகளை வாழா மொழிகளாகவே ஆக்கியுள்ளன.

இங்ஙனம் வாழும் மொழி, வாழ்வளிக்கும் மொழியாகிய தமிழில் வாழா மொழி, வாழ்வு கெடுக்கும் மொழியாகிய வடமொழியின் நான்கு எழுத்துக்களைப் புகுத்திடு செய்வதற்கான தேவை, அவசியம் என்ன? தமிழ்மொழி ஆட்சிக்குழு, அவ்வாறு செய்ய விரும்புவானேன்? அவ்வாட்சிக்குழு தம் நீண்ட காலத் திட்டத்தின் ஒருபடி என்ற முறையிலேயே அதற்கு ஆதரவு தர விதிர் விதிர்ப்புடன் காத்துக் கொண்டிருக்கும் வடமொழிப் பற்றுளரும் இப்புகுத்தீட்டுக்குக் கூறும் நியாய ஆதாரங்கள், வாதங்கள், காரண காரிய விளக்கங்கள் எவை? அவை நேர்மையானவையா, தமிழர் நலங்களுக்கு ஏற்றவையா, தமிழர் பண்பாட்டை வளர்ப்பவையா?

இவையே இப்போது நம் முன் உள்ள பிரச்சினை.

**முதலாவதாக:** பிறமொழிச் சொற்களைத் தமிழில் திருத்தமாக எழுதவும் வாசிக்கவும் இவ்வெழுத்துக்கள் தேவை, அல்லது இன்றியமையாதவை என்று கூறப்படலாம்.

(அ) இங்கே வடமொழிப் பற்றுளரின் புத்தம் புது முடிவுக்குக் கூறப்படும் ஆதாரம் உண்மையில் அவர்கள் இதற்குமுன் செய்த ஒரு பழய முடிவு மட்டுமே. பிறமொழிச் சொற்களைத் தமிழில் திருத்தமாக எழுதவும் பேசவும் வேண்டும் என்பதே இப்பழய முடிவு. இதற்கு ஆதாரம் அவர்களது இன்னும் பழமையான ஒரு முடிவே – இது முடிவுகளுக்கு முரணானதும்கூட. ஏனெனில் பிறமொழிச் சொற்களைக் கலக்கவேண்டும் என்ற முதல் முடிவு எடுக்கப்பட்டபோது, திருத்தமாக எழுதப் பேசவேண்டியதில்லை, தமிழுக் கேற்பத் திரித்துச் சிதைத்து வழங்கினால் போதும் என்றே கூறப்பட்டது. இங்கே வாதம் எதிரிகளையும் தமிழ்ப் பொதுமக்களையும் சந்தர்ப்பத்துக்கு ஏற்றபடி கூறி ஏமாற்றும் சந்தர்ப்ப வாதமாகவே முடிகிறது என்று காணலாம்.

திருத்தமாகவோ, திரித்தோ இந்த வடமொழிச் சொற்களைக் கலக்க வேண்டியதுமில்லை. அதனால் மென்மேலும் இக்கட்டுகளை வளர்த்துக் கொள்ள வேண்டுவதுமில்லை என்ற தனித்தமிழ் ஆர்வலர் கருத்தையே இப்போக்கு வலியுறுத்தத் தக்கதாயுள்ளது. ஏனெனில் வடமொழிக் கலப்பே தேவையில்லை என்பதற்குத் தனித்தமிழாளர் காட்டும் ஆதாரம் திறந்த உள்ளம் படைத்த எவரையும் மனநிறைவடையச் செய்யும். எத்தகைய வடமொழிக் கலப்பும் பிறமொழிக் கலப்பும் தேவையில்லாத அளவுக்குத் தமிழ், அதாவது தூய தனித்தமிழ் போதிய வளமுடைய தாயுள்ளது என்று அவர்கள் செயல் மூலமே எடுத்துக் காட்டுகின்றனர். காலஞ்சென்ற ஆசிரியர் மறைமலையடிகளாரும், அவரைப் பின்பற்றிய தனித் தமிழாளரும், புலவருலகும், அறிஞரும் பிறமொழிச் சொல் உதவியின்றி உலகின் அறிவெலாம், தமிழில் அளந்துரைத்துக் காட்டி வருகின்றனர். அவர்கள் செயல்வெற்றி – வடமொழிப் பற்றுளர்களின் கோட்பாட்டின் தோல்வியையும், அவர்களது நேர்மையற்ற பிடிவாத முடிவையுமே காட்டுகிறது.

(ஆ) மேலும், பிறமொழிச் சொற்களைக் கலந்துகொண்டிருக்கும் எந்த மொழியும் அதைத் தன் பண்பிற்கேற்பத் திரித்துத் தன்னை, தன் எழுத்துக்களின் உதவியாலேயே ஏற்றுள்ளன. வடமொழி கூட இவ்விதிக்கு விலக்கல்ல. மாக்ஸ்மூலர், மாக்ஷமூலர் என்றும் ஆனிபெஸன்ட், அன்னீபசந்தீ என்றும் அந்த மொழிகூடத் திரித்து வழங்கியதையே காண்கிறோம். சில சமயம் இடுகுறிப் பெயர்களேகூட எழுத்துப் பெயர்த்தெழுதப்படாமல் மொழிபெயர்த்துக் கொள்ளப்படுவதுமுண்டு. ஆக்ஸ்போர்டு கோதிர்த்தபுரி என்று ஆவது இது போன்றதே. பொது எழுத்தும் நெருங்கிய தொடர்பும் உடைய ஆங்கில, பிரஞ்சு மொழிகள்கூடச் சொற்களை இரவல் பெறும்போது அல்லது குறிக்க நேரும்போது இதே வகைப் பண்புகளையே கையாண்டு வருகின்றன. 'ஆங்கிலம்' (இங்லிஷ்) தமிழில் 'ஆங்கிலம்' என்று மாற்றுருவம்பெற்றது போலவே, பிரஞ்சிலும் 'அங்க்லேய்' ஆகிறது. இங்கிலாந்து என்பதன் பிரஞ்சு வடிவத்தில் பிற்பகுதி மொழிபெயர்க்கப்பட்டு, அங்கில்தர் (ஆங்கிலம்: லாண்ட் = பிரஞ்சு: தர் = தமிழ்: நிலம்) ஆகிறது. ஆங்கிலம் இப்பிறமொழிச் சிதைவில் மற்றெல்லா மொழிகளையும் விஞ்சியுள்ளது. அது ஒலிகளையே முற்றிலும் மாற்றி உருத்தெரியாத தாக்கிவிடுகிறது. எடுத்துக்காட்டாக ஏபிரேய மொழியின் 'தாவித்' அதில் 'டேவிட்' ஆகவும், இலத்தீன் மொழியின் 'தீதுசு' 'டைட்டஸ்' ஆகவும், 'கைசர்', 'சீசர்' ஆகவும் மாறிவிடுகின்றன. இங்கே உயிரொலி, மெய்ஒலி எல்லாமே மாறுவது காணலாம். அயல்மொழியின் எழுத்துக்கள் யாவும் தாய்மொழியிலும் இருந்தும் கூட, இங்கே தாய் மரபு பேணுவதற்காக அயல்மொழி ஒலிமரபு முற்றிலும் திரிக்கப்படுவது குறிப்பிடத்தக்கது.

வடமொழியும், பிரஞ்சும் மற்றெந்த உலக மொழிகளும், எவையும் எங்கும பின்பற்றாத திருத்தம் தமிழ்மொழிக்கு மட்டும் தேவை என்று வடமொழிப் பற்றுளர் ஏன், எவ்வாறு கருதுகின்றனர் என்பது தெரியவில்லை. அது உண்மையில் வடமொழி ஆதிக்கத்தைத் தமிழர் மீது ஏற்றித் தமிழர் அடிமைத் தனத்தைப் பெருக்கும் செயலேயன்றி வேறன்று என்று காண்பது அரிதன்று.

(இ) பிறமொழி கற்றுத் தேர்ந்தவர்கள் என்று காட்டிக்கொள்வதனால், மற்றத் தாய்மொழியாளர்களைவிடத் தாங்கள் இனஉயர்வு, குடிஉயர்வு அல்லது பண்பாட்டு உயர்வு உடையவர்கள் என்று கருதி, அவ்வுணர்ச்சியைப் பிறருக்கு அப்பிறமொழித் திருத்த நடிப்பால் குறித்துக்காட்டுபவர் பல நாடுகளிலும் உண்டு. இங்கிலாந்தில் பிரஞ்சு மொழி இவ்வாறு பண்பாட்டு உயர்வுக்குச் சின்னமாகவும், ஐரோப்பாவெங்கும் அது போலவே இலத்தீன் மொழி நாகரிக வகுப்பு உயர்வுக்கு அறிகுறியாகவும், இந்தியாவில் வடமொழி இவ்வெல்லா வகை உயர்வுக்கும் உரிய குறியீடாகவும் பொதுவாகக் கருதப்படுகிறது. ஆயினும் ஆங்கிலப் பொதுமக்களிடையே உயர்குடிப் பண்பாளர் செருக்குடன் பசப்பிக் காட்டும் பிரஞ்சு மொழித் திருத்தம் எப்போதும் பிரஞ்சுத் தாய்மொழி மக்கள் கேட்டால் சிரிக்கும்படியாகத்தான் இருக்கும். ஆனால் பிரஞ்சு மொழியைப்போல இலத்தீனும் வடமொழியும் தாய்மொழிகளல்ல. எனவே, பொதுமக்களிடையே உயர்வு கொண்டாடுபவர்களைக் கண்டு சிரிக்க அம்மொழிகளுக்குரிய மக்கள் யாரும் கிடையாது. முற்றத் துறைபோன ஆராய்ச்சியாளர்கள் மட்டுமே அது கேட்டு நகையாட முடியும். பல பல்கலைக்கழகங்களிலே இலத்தின் பல்கலைக்கழகங்களின் வடமொழிப் பேராசிரியது வடமொழி உச்சரிப்பு இவ்வாறு கேலிக்கிடமாய்ப் புதிய சூழல்களில் அமைவதுண்டு. வடமொழிப் பேராசியராயிருக்கும் வெள்ளையரின் எழுத்துக்கள் மதிப்புப் பெறும் அளவு அவர்களது ஒலிப்பு மதிப்புப் பெறுவதில்லை. இந்தியாவிலேயே வங்காளிகள் வடமொழியை உச்சரிக்கும் முறை பிறமொழி நிலத்தார் கண்டு 'இது என்ன விசித்திரப் புரியாமொழி' என்று மலைக்கும் படியாகவே உள்ளது.

இந்த நிலையில் அவ்வம் மொழியில், அம்மொழியைக் கையாளும் புலவர்தான் திருத்தத்தை ஓரளவு பேச்சிலும் எழுத்திலும் மேற்கொள்ளுதல் ஏற்புடையதாகும். தமிழிலே வடமொழி எனத் திருத்தும் எழுத்துத் திருத்தம் பேணுபவர், பெரும்பாலும் தமிழிலும் நாளடைவில் அறிவுகுன்றி அந்த வடமொழியிலும் தம் அறியாமையை அறிவென்று தருக்கித் திரிபவராகவே அமைவர்.

(ஈ) மிகப் பல தருவாய்களில் இத்திருத்த முயற்சியே கேலிக்குரிய வகையில் இரு மொழிகளையும் கொலை செய்யும் பெரும் பிழையாகவும் அமைகிறது. இதற்கு இரண்டு சான்றுகள் இங்கே காட்ட விரும்புகிறோம்.

சென்னையில் ஒருசில ஆண்டுகளுக்குமுன் தமிழ் எழுத்தாளர் சங்கத்தில், ஒரு தலைசிறந்த தமிழ் எழுத்தாளர் தமிழ்க் கவிதை பற்றிச்

— 11-ம் பக்கம் —

Bleed through.



"போற்றுபவர் போற்றட்டும் புழுதி வாரித்
தூற்றுபவர் தூற்றட்டும்; தொடர்ந்து செல்வேன்
ஏற்றதொரு கருத்தை என(து) உள்ளம் என்றால்
எடுத்துரைப்பேன் எவர்வரினும் நில்லேன்! அஞ்சேன்!"

எண்ணம் — கண்ணதாசன்
மலர் 4 ‖ 3—8—57 ‖ இதழ் 5

# 'மெல்லத் தமிழ் இனிச் சாகும்!'

இன்னுமொரு புதுவாழ்வு தமிழுக் கில்லை!
இன்றோடு தமிழழியும்! வருங்கா லத்தில்
மன்னுபுகழ்த் தமிழ்க்குலமும் மாண்டு போகும்!
'மாநில'மும் 'தமிழ்என்னும் பெயர ழிக்கும்!
தென்னவரின் கலை,கல்வி, சிதைந்து போகும்!
தென்பாங்கு நாகரிகம் மறைந்து போகும்!
அன்னியரின் மொழிஇங்கு ஆட்சி செய்யும்
அடுக்கிவந்த வரலாறும் முடிந்து போகும்!

செங்குருதி சாக்கடையாய்ப் போகும் போது
சிறுபுலிவெள் ளாடாக மாறும் போது
பொங்குகனல் புனலாகித் தணிந்த பின்பு
பூக்காடு முட்காடாய்ப் போன பின்பு
தங்கநகை பித்தளையாய்க் கருக்கும் போது
தமிழ்மட்டும் தமிழாக இருப்ப தேது?
'தொங்குமொழி' நாடெங்கும் பரவும் வேளை
தூங்குகிற தமிழ்மகனே! தூங்கு! தூங்கு!

பாண்டியரின் வழிநீயா? இமயக் கோட்டில்
பறந்திருந்த துன்கொடியா? இலங்கை நாட்டை
ஆண்டவர்கள் உன்னவரா? கலிங்கர் மண்ணை
அதிரடித்த துன்குலமா? கடல்கள் மூன்றைத்
தாண்டியவர் பரம்பரையா? புட்ப கத்தில்
சாவகத்தில் கொடிபோட்டான் பிள்ளை யாநீ?
மாண்டதொரு வரலாற்றுக் கும்உ னக்கும்
மயிரளவும் தொடர்பில்லை! எதற்கு வார்த்தை!

தன்வீட்டில் பிறர்பேச்சைக் கேட்கும் போது
தமிழ்ரத்தம் துள்ளிஎழும்! தமிழ னே!நீ
உன்வீட்டை விற்றபினும் பேசு கின்றாய்!
ஓங்காரக் கூச்சலிலே என்ன லாபம்?
பொன்வீட்டில் குரங்குமொழி! பிறந்த காலம்
புரியாத தமிழமொழி கொல்லை மேட்டில்
கண்மூடு! தமிழ்மகனே! உறங்கு நன்றாய்!
கழுத்தறுந்து சாகும்வரை திறக்க வேண்டாம்!

தமிழனுக்குச் சூடில்லை! சொரணை யில்லை!
தன்முன்னோர் வகுத்தவழி நினைவு மில்லை!
அமிழ்தென்பான் தன்மொழியை! அடுத்த நேரம்
அழகுமொழி 'சமஸ்கிருதம்'; அதையும் கற்றால்
கமழ்ந்திடுமே தமிழ்என்பான்! இந்தி வந்தால்
கனித்தமிழே வாழ்வுபெறும் என்பான்! தானும்
தமிழனுக்கே பிறந்தவனென் றுரைப்பான்! சுற்றம்
தலைகுனிய வேறென்ன வார்த்தை வேண்டும்?

மாண்டமொழி கொடுத்தகடன் கொஞ்சம்; பாலி
வழங்கியது கொஞ்சம்;ப்ரா கிருத மென்னும்
ஆண்டிமொழி போட்டபிச்சை கொஞ்சம்; கூட்டி
ஆக்கியது இந்தி! அது ஆட்சி செய்யும்!
வேண்டும்வரை கடன்தந்து தெலுங்கை ஆக்கி
வீணைநிகர் 'ஞ'தந்து, சொற்கள் தந்து
ஆன்றபுகழ் மலையாளம் கன்ன டத்தை
ஆக்கியது தமிழ்! அஃது சாக்கா டேகும்!

'வல்லினமும் மெல்லினமும்' மறைந்து போகும்!
வயிற்றுவலி வார்த்தைஇனம் சிறந்து பொங்கும்
நல்லினத்தில் தெளிந்தஇனம் அழிந்து போகும்!
நாகரிக மற்றஇனம் ஆட்டம் போடும்!
சொல்லுங்கால் எரியுதடா வயிறு! உன்னைச்
சுமந்தவளும் தமிழ்ப்பெண்ணு! கூர்ந்த வாளால்
சல்லிசல்லி யாய் அவளைச் சிதைக்க வேண்டும்!
தடிமரத்தை ஈன்றவளா தமிழ மங்கை!

"நடுவரசின் பதவிக்கு இந்தி வேண்டும்!
நாட்டோரே! கற்க!" வெனச் சென்னை ஆளும்
கெடுவரசின் அமைச்சரவர் கிளற்று கின்றார்!
கேட்கின்றோம், நெஞ்செரிய தமிழ நாட்டீர்!
"நடுவரசு நமக்கெதற்கு? என்ன தேவை?
நம்மரசு நமக்கிருந்தால் இந்தி ஏது?"
–கடுமொழியில் கேட்கின்ற கழக மல்லால்
'கண்ணகியின் கால்வழியோர்' யார்கேட் டார்கள்!

குண்டலமும் மேகலையும் சிலம்பும் முப்பாற்
குறள்மறையும் ஐந்திணையும், பதிற்றுப் பத்தும்
தண்டியும்தொல் காப்பியமும், நளவெண் பாவும்
தலைவளையா பதி, சிந்தா மணிக லிங்கம்
கொண்டவனின் பரணியொடு கலம்ப கங்கள்
கோவேந்தர் உலாக்கள் மடல்பிர பந்தங்கள்
எண்டிசையும் புகழ்மணக்கும் பத்துப் பாட்டும்
என்னாகும் இந்தியெனும் பேய்பு குந்தால்?

லம்பாடி லம்பாடி லம்பாடிப் பேய்
நாய்குரைத்த ஓசையிலே பிறந்த பாடை!
கொம்பொன்று போடாமல் தொங்'க வொண்ணுக்
குரங்கெழுத்தைக் கொண்டமொழி! 'ஹைஹை' என்று
நம்நாட்டில் குதிரைகளை ஒட்டும் சொல்லை
நலுங்காமல் எடுத்துப்போய் வினைச்சொல் லாக்கி
தெம்போடு வாழ்வதற்கு மேலும் வார்த்தை
தேடியவா றலைகின்ற தெருப்பொ றுக்கி!

பொதுமொழியாம்! ஆடைகளைக் களைந்து போட்ட
பூவையவள் தான்கற்பைப் புகலு வாளாம்!
மதுக்குடித்தார் கூட இதைக் கூற மாட்டார்!
மண்டலத்தை ஆள்கின்றார் கூறு கின்றார்!
கதியற்ற தமிழ்மகனே! உன்னை நம்பு!
காலத்தைக் கடந்ததமிழ் மொழியை நம்பு!
சதிகார இந்தியினை ஒழிக்கு மட்டும்
தமிழ்வாழ்வு பிழைக்காது எச்ச ரிக்கை!

# எஸ்.ஏ.பி.

### 3

அஞ்சலை துடித்துப் போனாள். அது வடிவேலுவின் குரல் தான். சிறிதுதூரம் வண்டியோடுகூடத் தானும் ஓடினாள். எவ்வளவு தூரம் போகமுடியும்! எப்படித்தான் அதைப் பிடிக்க முடியும்! வேனிலிருந்த வடிவேலுவின் மனமும் கொதித்தது. அஞ்சலை இங்கே எப்படி வந்தாள்? எதற்காக வந்தாள்? அவனால் எதையும் விளங்கிக் கொள்ள முடியவில்லை. அதிர்ச்சி தரத்தக்க இந்தச் சந்திப்பு அவன் உடலைக் கொதிக்க வைத்தது. 'பளிச்'சென்று வேனிலிருந்தே குதித்துவிடலாமா என்கிற அளவுக்கு அவன் சிந்தனை ஓடிற்று. கூட இருந்தவர்களெல்லாம் ஒன்றும் புரியாமல் 'யாரடா அது? யாரடா அது?' என்று கேட்டார்கள். முன் 'சீட்'டிலிருந்த அதிகாரி, கேட்டும் கேளாதவர் போலிருந்தார். 'என் மனைவி' என்று வடிவேலு சொன்னதும் 'அடபாவி' என்றார்கள் எல்லோரும் ஒருமுகமாக. யார்தான் என்ன செய்யமுடியும்! வடிவேலு அழுதுவிட்டான்.

எஸ். ஏ. பி. படையில் கட்டுப்பாடுகள் அதிகம். சொந்த ஆசாபாசங்கள், விருப்பு, வெறுப்புகளுக்கு அதில் இடமில்லை. 'அடி' என்றால் அடிக்கவேண்டும். 'சுடு' என்றால் சுடவேண்டும். 'புறப்படு' என்றால் புறப்பட்டுவிடவேண்டும். ஒரு இயந்திரக் கூறாகவே அவர்கள் வேலை செய்யவேண்டும். உத்தரவுகளுக்கு உடனடியாகப் பணியும் கட்டுப்பாட்டிலிருந்து சிறிது விலகினாலும், வேலை காலியாகிவிடும். வேனிலிருந்து குதிக்க முடியாமல் வடிவேலு உட்கார்ந்திருந்ததற்கு இந்தக் கட்டுப்பாடு ஒரு காரணம்.

★

தட்டுத்தடுமாறி வந்த அஞ்சலை வேலூர் எல்லையை அடைந்தாள். வேலூருக்குப் போய் வேலை தேடுவதா? வடிவேலு இருக்குமிடத்தைத் தேடிப் போய்விடுவதா? என்ற சிக்கல் அவளை ஆட்கொண்டது. சந்திக்காமலிருந்திருந்தால் கவலை இல்லை. சந்தித்துப் பிரிந்த பிறகு மனம் எப்படி அமைதியடையும்! அஞ்சலை ஒரு கல்லின்மீது உட்கார்ந்தாள். கால்கள் வலித்தன. கால்களைக் கொஞ்சம் பிடித்துவிட்டுக் கொண்டாள். அது அவள் இருதயத்திற்குக்கூட ஆறுதலாக இருந்தது. குளிர்ந்த காற்று வீசியது. அஞ்சலை நிதானமாகச் சிந்தித்தாள். வேலூருக்குப்போய், வேலை தேடி, அது கிடைப்பது எப்போது? கிடைத்தாலும் சம்பளம் கிடைப்பது எப்போது?-வேலை தேடும் நம்பிக்கை தளர்ந்தது. வடிவேலு இருக்குமிடத்திற்குப் போய், வடிவேலுவைச் சந்தித்துவிட்டால்...பிறகு எல்லாச் சிக்கலும் தீர்ந்துவிடும்!-இந்த நம்பிக்கை வளர்ந்தது. வடிவேலு இருக்குமிடம் சென்னை. சென்னை அருகில்தான் இருக்கிறதா? இப்போது வடிவேலு சென்னைக்குத்தான் போயிருக்கக்கூடுமா? இப்படி யோசித்துக்கொண்டே இருந்தபோது, ஒரு பஸ் வருவதைக் கண்டாள். வந்த பஸ் அவள் உட்கார்ந்திருந்த இடத்திற்கு அருகிலேயே நின்றது.

'ஏய்யா! இந்த பஸ் எங்க போகுது?' என்று கேட்டாள் அஞ்சலை.

'மெட்ராசுக்கு......மெட்ராசுக்கு...' என்றான் டிரைவர்.

அஞ்சலை யோசிக்காமல், உடனேயே அதில் ஏறி உட்கார்ந்துகொண்டாள். இரண்டே முக்கால் ரூபாய் பணம் கேட்டான் கண்டக்டர்.

'பட்டணத்துக்கே அவ்வளவுதான் சார்ஜா?' என்று கேட்டாள் அஞ்சலை.

'ஆமாம்...' என்றான் கண்டக்டர்.

அஞ்சலை முந்தானையிலிருந்த முடிச்சை அவிழ்த்து, இரண்டே முக்கால் ரூபாய் எடுத்துக் கொடுத்தாள். பஸ் புறப்பட்டது. சென்னை வரும்வரை அஞ்சலை நிம்மதியில்லாமல்தான் இருந்தாள். புத்தூர் ஆஸ்பத்திரியில் கிடக்கும் சின்னையாவின் ஞாபகம், பஸ்ஸிலிருந்து அவளைப் பின்புறமாக இழுத்தது. ஆறுதல் சொன்ன நர்ஸை நினைத்து மனம் தேறி அமர்ந்திருந்தாள். இரவு எட்டரை மணிக்குச் சென்னை வந்து சேர்ந்தாள். சைனாபஜாருக்கு அருகிலிருக்கும் வெளியூர் பஸ் ஸ்டாண்டில் இறங்கிய அவள், வழியில் கண்டவர்களையெல்லாம் 'ஆயிரம் விளக்கு எங்கே, ஆயிரம் விளக்கு எங்கே?' என்று விசாரித்தாள். நல்லவேளையாகத் தன் கணவன் இருக்குமிடத்திற்கு ஆயிரம் விளக்கு என்று பெயர் என்பதை நினைவில் வைத்திருந்தாள். 'இத்தனும் நம்பர் பஸ்ஸில் ஏறிப் போ' என்று ஒவ்வொருவரும் யோசனை சொன்னார்கள். பஸ் நிற்குமிடத்தில் வந்து நின்றாள் அஞ்சலை.

இரவு எட்டு மணிக்குமேல் சென்னை நகரம் விசித்திரமான சூழ்நிலையில் காட்சிதரும். மனித குணங்களுக்கு மிருகச் சாயம் ஏற்றப்படும் அந்த நேரத்தைப் பணம் சேர்க்கப் பயன்படுத்திக் கொள்கிறவர்கள், தெருக்களில் சுற்றிக் கொண்டிருப்பார்கள். கொஞ்சம் வாட்ட சாட்டமாக உள்ள பெண்ணோ, வசதியுள்ள ஆடவனோ தனியாகத் தென்பட்டுவிட்டால் அவர்களது வேட்டை ஆரம்பமாகிவிடும். அஞ்சலை தனியாக நிற்பதைப் பார்த்து, அந்த வகையினரில் ஒருவன் அவளை நெருங்கினான். 'எங்கேம்மா போகணும்?' என்று மெதுவாகக் கேட்டான். 'ஆயிரம் விளக்கு' என்றாள் அஞ்சலை. கிராமத்து மக்களைப் போலவே தான், சென்னை நகரத்து மக்களும் இருப்பார்கள் என்றுதான் அவள் நினைத்திருந்தாள். கள்ளமும், கபடமும் நிறைந்த நகரத்தை, அவள் எப்படி அறிந்திருக்கமுடியும்!

'வாம்மா, 'ரிக்ஷா'விலே போகலாம்' என்று அவன் அழைத்தான்.

மூக்கையக் கோனார் மாதிரி இவரும் ஒரு நல்ல மனம் படைத்தவர்போலிருக்கிறது என்று எண்ணிய அஞ்சலை, மௌனமாக அவனைப் பின் தொடர்ந்தாள். அவனும் பெரிய முதலாளி மாதிரி கைதட்டி ஒரு ரிக்ஷாக்காரனைக் கூப்பிட்டான். அவனது நடைமுறைகளைப் பார்த்த அஞ்சலை, முழுக்க அவனை நம்பி 'ரிக்ஷா'வில் ஏறிக் கொண்டாள். கடற்கரையை ஒட்டியிருந்த சில குடிசைகளுக்கு நடுவிலே அவள் அழைத்துச் செல்லப்பட்டாள். ஒரு குடிசைக்குள்ளே அவளை உட்காரவைத்துவிட்டு, ரிக்ஷாவுக்குக் காசு கொடுத்தனுப்பினான் அவன். இது அஞ்சலைக்குத் திகைப்பாக இருந்தது.

'இதுதான் ஆயிரம் விளக்கா?'—திரும்பி வந்த அவனிடம் அவள் கேட்டாள்.

'இல்லை, சொல்றேன் கேளு. நீ எதுக்கும் கவலைப்படாதே! வேண்டியவசதி எல்லாம் இங்கே இருக்கு. ஆமாம்...ஆயிரம்விளக்கில் நீ யாரைப் பார்க்கணும்?'-அவன் கேட்டான்.

'எம் புருஷனை!'

'பேரு...?'

'வடிவேலு'-இதைச் சொல்லும்போது அவளுக்கு நாணம் ஏற்பட்டது.

'ஓ...வடிவேலா? எனக்குத் தெரியுமே! எனக்கு நெருங்கிய சினேகிதனாச்சே... ஆமாம்... அவன் இந்த 'இதி'ல் இருக்கானில்ல...'

'ஆமாம் போலீசுல இருக்காரு!'

அவனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. இருந்தாலும் சமாளித்துக்கொண்டு 'ஆமாமா... போலீசுல...இங்ககூட அடிக்கடி வருவார். இப்பத்தான் கொஞ்சநாளா வர்ரதில்லை...' என்றான் அவன்.

'அவரை இப்ப பாக்கணுமே!' என்று கேட்டாள் அஞ்சலை.

'ஓ...பாக்கலாமே! ஆனால் இந்த ராத்திரி நேரத்தில் எப்படி முடியும்? நாளை காலையிலே போகலாம்...!'

'அதுவரைக்கி...?'

'இங்கேயே இரு! இந்தா, இந்தப் பத்து ரூபாயை வச்சுக்க...' என்று ஒரு பத்து ரூபாய் நோட்டை நீட்டினான் அவன்.

'எதுக்கு...?'—இது அவள் கேள்வி.

'அட சும்மா வச்சுக்க... இதென்ன உலகத்தில் இல்லாததா? ..சும்மா கொஞ்ச நேரம்... கைச் செலவுக்கு ஆகாதா?...' என்றான் அவன்.

அவளுக்குப் 'பகீ'ரென்றது.

'என்ன சொல்றிய...?' என்று பயத்தோடு கேட்டாள்.

'இந்தா பாரும்ம...இன்னம் கொஞ்ச நேரத்தில் ஒரு ஐயா வருவாரு. அவர் கூடக் கொஞ்ச நேரம் 'ஜாலி'யாப் பேசிக்கிட்டிரு. இன்னம் பத்து ரூபா கொடுப்பாரு!...' என்றான் அவன்.

'அட பாவி! நீ நாசமாப்போக. இதுக்குத்தானா என்னை நீ இங்கே கூட்டியாந்த. நான் குடும்பத்துப் பொண்ணுடா! எவனாவது கிட்ட வந்தான்னா சல்லி சல்லியாப் பேத்திருவேன்...' என்று ஆத்திரத்தோடு சொன்ன அஞ்சலை, 'ஓ'வென்று அழ ஆரம்பித்தாள்.

'உடனே 'பளிச்'சென்று

**கண்ணதாசன்**



அவன், இடுப்பிலிருந்தகத்தியை உருவிக் கொண்டு, 'சத்தம் போட்டால் குத்திக்கொன்னுடுவேன். இதுக்கு நீ இணங்கலைன்னா, இப்படியே கழுத்தை வெட்டிக் கடல்ல 'தூக்கி' எறிஞ்சிடுவேன். என்னமோ போனாப் போகட்டுமுன்னு பணம் கொடுத்தா, ரொம்பப் பேசுறியே! பணம் குடுக்காமலே ஒன்னை முடிச்சிற முடியாதா என்ன..!' என்றான்.

அஞ்சலை வாயடைத்துப் போனாள். தான் பலியாகி விடுவோமோ என்ற பயம் தோன்ற ஆரம்பித்தது.

அடுத்த குடிசையிலிருந்த இரண்டு பேர் அஞ்சலை இருந்த குடிசைக்குள் நுழைந்தார்கள். அவர்கள் வந்ததும் 'குப்'பென்று அடித்த சாராயநாற்றம், அஞ்சலையின் மூக்கைத் துளைத்தது. இருவரும் தள்ளாடித் தள்ளாடி நின்றார்கள்.

'என்ன அண்ணே! 'சரக்கு' என்ன சொல்லுது?...' என்றான் ஒருவன்.

'சும்மா மெரளுது தம்பி!' என்றான் அவன்.

'இங்கே வர்ரதெல்லாம் ஆரம்பத்திலே மெரளத்தான் செய்யுது. அப்புறம் அப்புறம் சரியாப் போயிடும் அண்ணே!'—குடிகாரர்களில் ஒருவன் மெதுவாக அஞ்சலையைநெருங்கி முகத்தைத் தொட்டுப் பார்த்துவிட்டு ''சரக்கு' நல்ல 'சரக்கு'த்தான். நம்ம பிராட்வே சாமிகிட்ட காட்டுனா, நூறு ரூபாய் குடுப்பாரு. நாட்டுச் 'சரக்கு'ல இவ்வளவு அழகான 'சரக்கு' வேற எங்க கெடைக்கப்போவுது?' என்றான்.

'இப்ப அய்யரு வருவாருடா!...' என்றான் அஞ்சலையைக் கூட்டி வந்தவன்.

அஞ்சலையின் தலை சுழன்றது. சீற்றத்தால் பயனில்லை என்று அறிந்த அவள், கருணையை எதிர்பார்த்துக் கெஞ்ச ஆரம்பித்தாள்.

'ஐயா ஒங்களைக் கும்பிடறேன். என்னை விட்டுடுங்க. எம்புள்ளை கால் முறிஞ்சு புத்தூர் ஆஸ்பத்திரில கிடக்கு. எம் புருஷனைத் தேடித்தான் இங்க வந்தேன். எனக்கு உதவி பண்றதாச் சொல்லி, இப்படிக் கூட்டியாந்து கெடுக்கப் பாக்கிறியளே. கெட்டுப்போனா செத்துப்போறதைத் தவிர, எனக்கு வேற வழியில்லை. கெட்டுப்போனவளை எங்க சாதியில வெட்டிப் போட்டுடுவாங்க. உங்க மகமாதிரி நெனச்சு, என்னை விட்டுடுங்க...' என்றாள்.

'ஒஞ்சாதிக்கு இது ஏன் தெரியப்போவுது? இது ராத்திரியோட முடிஞ்சுபோற விவகாரம். காலையில நீ ஒன் புருஷன்கிட்டப் போயிடலாம்! இல்லை, இஷ்டப்பட்டா இங்கேயே இருக்கலாம். மாசம் நூறு ரூபாய் தர்றேன். நல்ல சாப்பாடு போடுறேன். புடவை வாங்கித் தர்றேன். தினம் ஒரு ஆளுக்குமேல் விடமாட்டேன்!' என்றான் அவன்.

அவன் குரலைக் கவனித்த அஞ்சலை, எப்படியும் பலியாக்கத் தீர்மானித்திருக்கிறான் என்பதைப் புரிந்துகொண்டாள். அந்தக் குடிசையில் ஒவ்வொரு சுவரும் அவளுக்கு எதிரியாகத் தோன்றிற்று. அழுதாள். அரற்றினாள். தலையைத் தரையில் மோதிக்கொண்டாள். எதற்கும் அவர்கள் அசைவதாக இல்லை. இறுதியில் அவர்களில் ஒருவன் அவள் கைகளை ஒரு கயிற்றால் கட்டிப்போட்டு, வாயிலே துணியைவைத்துஅடைத்தான். பிறகு அவர்கள் மூவரும் கதவை வெளிப்புறம் பூட்டிக்கொண்டு வெளியேறினார்கள்.

ஒருமணி நேரம் கழிந்து யாரோ சிலர் அந்தப் பக்கம் நடந்துவரும் செருப்புச் சத்தம் கேட்டது அஞ்சலைக்கு. மூஞ்சுக்கூட விடமுடியாமல் திணறிக் கிடந்த அவள், கதவு திறக்கப்படுமா என எதிர்பார்த்தாள். கதவு திறக்கப்பட்டது. அலங்காரம் செய்துகொண்டிருந்த நடுத்தர வயதுக்காரனொருவனும், அஞ்சலையை அங்கே கொண்டுவந்து அடைத்தவனும் உள்ளே நுழைந்தார்கள். அஞ்சலையின் வாயை அடைத்திருந்த துணியை அவன் எடுத்தான். கைக்கட்டை அவிழ்த்தான். அவளுக்குப் புத்திமதி சொன்னான். 'ஐயா மனசுவச்சாரனா நீ பணக்காரிதான். அவ்வளவு பெரிய பிரபு இவரு' என்று கூடவந்தவரைக் காட்டினான். அஞ்சலை பிரமை பிடித்தவள் போல் இருந்தாள். அவள் மூளை தீவிரமாக வேலை செய்தது. 'சரி, சரி. இவனைத் தனியாக விட்டுவிட்டுத்தானே அவன் போகப் போகிறான். போகட்டும். இவனைக் கவனித்துக்கொள்வோம்' என்று மனதில் நினைத்துக்கொண்டு மேலும் கீழுமாகப் பார்த்தாள். கூரையிலே சொருகியிருந்த அரிவாள் ஒன்று அவள் கண்களில் பட்டது. உடனே, இணங்கிவிட்டவள்போல் பேச ஆரம்பித்தாள். அந்தத் தரகன் மிக உற்சாகத்தோடு அவளைப் புகழ்ந்துவிட்டு, அந்த நடுத்தர வயதுக்காரனிடம் ஐம்பது ரூபாயை வாங்கிக்கொண்டு, ஒரு பழைய மெத்தையையும், தலையணையையும் எடுத்து விரித்துவிட்டுக் கதவைச் சாத்திக் கொண்டு வெளியேறினான்.

சிறிதுநேரத்திற்கெல்லாம் இரண்டு போலீஸ் வண்டிகள் குடிசைகளுக்குச் சிறிது தூரத்தில் வந்து நின்றன. விசில் சப்தம் கேட்டது. ஆம்; பெரிய அளவில் மதுவிலக்குச் சோதனை நடத்த எஸ். ஏ. பி. போலீசாரின் துணையோடு 'லோக்கல்' போலீசார் அங்கே வந்திருந்தார்கள். வந்திருந்தவர்களில் வடிவேலுவும் இருந்தான்.

(தொடரும்)

## கவிதையிலே காளான்கள்

— 1ம் பக்கத் தொடர்ச்சி —

கனவை தன் ஊமைத்தனத்தால் உளறுவதுபோல், வெறும் உணர்ச்சி வாந்தி வாந்தியாக வரும். புதுமைப்பித்தனுக்கு ஏதோ உணர்ச்சி இருந்தது என்பதை ஒப்புக்கொண்டுபார்த்தாலும், அந்த உணர்ச்சி ஊமையன் மொழியில்தான் விழுந்திருக்கிறது என்பதைத் தெரிந்துகொள்ளுவோம். குறைப் பிரசவம் குழந்தையாகாது; வெறும் உணர்ச்சி கவிதையாகாது! உணர்ச்சிக்கு நிலைக்களன் மொழி. மொழியின் பக்குவம் இலக்கணம். உணர்ச்சி ஒழுங்காக உருவாக வேண்டுமென்றால், இலக்கணம் தேவை. வசனத்துக்கும் கவிதைக்கும் உள்ள பேதம் இதுதான். பரதனைக் கண்ட குகனின் சீற்றத்தைச்சித்தரிக்கும்கம்பன், குகனின் அதே உணர்ச்சியைத் தானும் பெற்றிருக்கிறான். எதுகை, மோனை கெடாமலும் ஆத்திர வேகத்துக்குரிய தாளத்தோடும் கவிதை யாத்திருக்கிறான். அதனால் அவனுடைய உணர்ச்சி முழு வடிவம் பெற்றுக் குதிக்கிறது. தாள ஒழுங்கு இல்லாமல் அந்த உணர்ச்சி குதித்திருக்குமானால், ஆத்திரம் அழுகையாகத் தோன்றும். ஆத்திரத்துக்குரிய 'ஜீவ சக்தி' அதில் இருக்காது. சொல்ல வருகிற கருத்துக்கு, துணைபுரியும் மொழியின் அழுத்தம், தாள ஒழுங்கோடு இருந்தால்தான் கவிஞன் பாத்திரமாகவும், ரசிகனாகவும் ஒரே சமயத்தில் மாறி, ஒரே உணர்ச்சியை நிலைபெறச் செய்யமுடியும். குறைந்த பட்சம், ஓசை நயமாவது இருந்தால்தான், உணர்ச்சிக்கு உருவகம் கிடைக்கும். 'அதுகூடத் தேவையில்லை: வெறும் உணர்ச்சியைக் கொண்டு மரத்திலே மோதினால் போதும்' என்கிறார் புதுமைப்பித்தன். அப்படியே மோதியும் வைத்திருக்கிறார். இவற்றை வெறும் வேடிக்கைப் பாடல்கள் என்றால் வேதனைப்படுவதற்கில்லை. கவிதை என்று சாதிக்கும்போதுதான் கழுத்தறுபடுகிறது. 'கார்மன் மிராண்டா கல்ச்சர்' என்றும், 'கிரீமின் மணம்' என்றும் 'ஜம்ப'ரென்றும் 'காலேஜுக் கன்னி' என்றும் 'தார்ரோடு' என்றும் 'ஆறு கெஜச் சேலை' என்றும் மொழிக் குழப்பம் வேறு, விழி பிதுங்க வைக்கிறது. இலக்கண நடையில் கிராமிய நடை புகுந்து புகுந்து தாக்குகிறது. அதுவும், 'நேரிசை வெண்பா'வின் வடிவத்திலேயே!

உணர்ச்சியுமில்லாமல் ஒழுங்குமில்லாமல் பிறந்த இவை, எப்படிக் கவிதைகளாக முடியும்? வேடிக்கைப் பாடல்கள் என்று தலைப்பிட்டிருக்க வேண்டும். கவிதைகள் என்று பெயரிட்டிருப்பதால் 'காளான்கள்' என்ற பெரும் பெயரைப் பெறுகின்றன.

வசன கவிதை என்று தலைப்பிட்டு எழுதுகிறவர்கள், பாரதியைத் தங்களுக்கு உதாரணமாகக் கொள்கிறார்கள். பாரதி, கவிதையில் வரக்கூடிய பொருள்களை வசனமாக எழுதியதால், அதற்கு வசன கவிதை எனப் பெயர் தந்தான். கருத்து மதிப்பால்தான், கவிதை என்ற பெயருக்கு அந்த வசனம் தகுதியுடையதாகிறது. கவிதையின் மூலம் பெறக்கூடிய சகல இன்பங்களையும், பாரதியின் வசனத்திலே பெறுகிறோம். அந்தக் கருத்துக்கள் நிலையானவை. ஆனால், இன்றைய வசன கவிதைக்காரர்களின் கருத்துக்கள் அவர்கள் கண்முன்னாலேயே அழிந்துவிடக் கூடியன. கருத்துமில்லாமல், கவிமுறையுமில்லாமல் அவை எப்படி வசன கவிதை என்ற பெயரைக்கூடப் பெற முடியும்? சுருங்கச் சொன்னால், எதையாவது தாறுமாறுபடி செய்து, இது கவிதை என்று நீட்டிவிடக் கூடிய துணிவு பிறந்திருக்கிறது சிலருக்கு. அந்தத் துணிவின் தந்தை புதுமைப்பித்தன். கவிதை என்ற பெயரிலே வெளிவந்திருக்கும் இந்த நூல், ''இவரும் ஒரு எழுத்தாளரா?'' என்ற கேள்வியைத்தான் நம் முன்னால் நீட்டுகிறது. இந்தக் கவிதைகளை எழுதியதாகக் கூறப்படும் புதுமைப்பித்தனும், இதற்கு முன்னுரை எழுதியவரும், இதை வெளியிட்ட பதிப்பகத்தாரும் தமிழ்ப்பெருமக்களின் நிலையான அனுதாபத்துக்குரியவர்கள். ★

**ரஷ்யா, ஏகாதிபத்திய நாடா, முற்போக்கு சக்தியா ?**

# ஏகாதிபத்திய நாடுதான்!

**பரிசுபெற்ற கட்டுரை**

'ரஷ்யா, ஏகாதிபத்திய நாடா, முற்போக்கு சக்தியா ?' என்ற பிரச்சினையில் 'தென்றல்' துவக்கிய கட்டுரைப் போட்டிக்கு ஏராளமான கட்டுரைகள் வந்துள்ளன. அவற்றில், தகுதிபெற்ற முதல் கட்டுரை இது. இதேபோல், 'முற்போக்கு சக்திதான்' என வாதிக்கும் ஒரு கட்டுரையும் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறது. விவரங்கள் சுருக்கமாக இருந்தாலும் தொட்டுக் காட்டியுள்ள இடங்கள் நன்றுக உள்ளன. இந்தக் கட்டுரையாளருக்கு ரூ. 12-8-0ம், எதிர்வாதம் புரிபவருக்கு ரூ 12-8-0ம் பரிசாக அனுப்பப்பெறுகின்றன. ஒவ்வொருவரும் தங்கள் வாதத்திற்கு மட்டும் ஆதாரம் காட்டி, எதிர்வாதத்திற்கு பதில் சொல்லாத காரணத்தால் பரிசுத் தொகை இப்படிப் பங்கிடப்பட்டது. இன்னும் இரண்டு கட்டுரைகள் தேர்ந்தெடுக்கப்பட்டன. அவையும் அடுத்தடுத்து வரும்.

[ ஆ-ர். ]

எழுதியவர்
கா. வேழவேந்தன்
பச்சையப்பன் கல்லூரி,
சென்னை-30.

இன்பம், துன்பம், போராட்டம், அமைதி, உழைப்பு, ஓய்வு, வெற்றி, தோல்வி, அன்பு, ஆசை, பசி, காதல், உளநிறைவு, நிறைவின்மை-இவற்றால் ஆனதுதான் மனிதனின் வாழ்வு. இவை ஒவ்வொன்றும் அவன் வாழ்விலே குறுக்கிட வேண்டியது அவசியமாகிறது; அப்பொழுதுதான் அவன் வாழ்வும் சுவைக்கும். இத்தன்மைகள் நிறைவுறாத வாழ்வைத்தான் நாம் இயந்திர வாழ்வு என்று குறிப்பிடுகிறோம்.

பொதுவுடைமைத் தோழர்களால் 'பூலோக சொர்க்கம்' என்று சுட்டிக் காட்டப்படுகிற, ருஷ்ய நாட்டிலே வாழும் ஒரு தனி மனிதனால் இவற்றை எல்லாம் சந்திக்கமுடியாது என்று கூறிவிட்டாலும், முழுக்க முழுக்க அவனால் இவை ஒவ்வொன்றையும் சுவைக்கமுடியாது என்பதையும் மறுக்க இயலவில்லை! காரணம் ருஷ்ய நாட்டின் அரசியல் அமைப்பும், நிர்வாகத் திட்டங்களும்தான்.

## ஏட்டளவில் சட்டம்; எழுத்தளவில் 'மக்களாட்சி'

அங்கே ஏழை என்றும் அடிமை என்றும் எவனுமில்லை. பிறந்தவன் உணவுக்கும் உடைக்கும் கல்விக்கும் கவலைப்படவேண்டிய அவசியமில்லை என்றெல்லாம் கூறப்பட்டாலும், ஒரு மனிதனுக்குத் தேவையானவை இவை மட்டும்தானா? அவனுக்கென்று சில உரிமை உணர்ச்சிகள் இருக்கின்றன; எதையும் இறுதிவரை காணவேண்டும் எனத் தூண்டும் இதயம் இருக்கிறது. எப்படி விண்ணிலே பறந்து திரியவும் விரிகடலிலே மூழ்கியெழவும் அவன் உள்ளம் விரும்புகிறதோ, அது போன்றே தான் வாழ்க்கையின் அத்தனை துறைகளையும் முழுக்க முழுக்க அனுபவிக்க எண்ணுகிறான். கட்டுப்பாடுகள் பெரும் இடர்ப்பாடுகளாகத் தோன்றுகின்றன அவனுக்கு.

எனவே அவன் சமுதாய நலனுக்காக, தன் உரிமைகளையும் உணர்ச்சிகளையும் ஓரளவு கட்டுப்படுத்திக் கொள்ள வேண்டியவனாகிறானே ஒழிய, தன் முழு உரிமையையும் இழக்க விரும்புவதில்லை. இருபது கோடி மக்கள் தொகை கொண்ட ருஷ்ய நாட்டில், இந்தத் தத்துவம் எவ்வளவு தூரம் உயிருடன் வாழ்கிறது என்று பார்த்தால் அந்த நாட்டினை, 'மக்களாட்சி' நடைபெறும் நாடு என்று யாருமே ஒப்புக்கொள்ளமாட்டார்கள்.

"எந்த ஒரு அரசாங்கம் விளங்க முடியாததாகவும் சிக்கல் நிறைந்ததாகவும் இருக்கிறதோ, அதற்குப் பெயர்தான் பொறுப்பற்ற அரசாங்கம் என்பது" என்கிறான் ஒரு சரித்திராசிரியன். அதற்கு எடுத்துக்காட்டாக நானிருக்கிறேனே என்று முன்னே வருகிறது ருஷ்யநாடு.

இந்த நாட்டில் 'மக்களாட்சி' என்பது தோன்றியதே ஒரு விந்தையான சூழ்நிலையில்தான். அப்பொழுது ஏற்பட்ட அரசியல் திட்டமும் அந்த முறையில் தானே அமையமுடியும்! 1916 ல் ஜார் மன்னனின் காட்டாட்சியும், மதவாதி ரஸ்புடீனின் மாபாதகச் செயல்களும், பண்ணைக்காரர்களின் பகட்டான வாழ்வும், பண முதலைகளின் அதிகார வெறியும் சேர்ந்து புரட்சிக்கு வித்தூன்றின. வித்து விளைந்து மணம்வீசும் பொதுவுடைமை மலர் பூக்கும் என்று தான் அனைவரும் எதிர்நோக்கினார்கள்; ஆனால் பூத்த மலரோ காகித மலராகிவிட்டது!

'மன்னர் மரபு தாங்கொணுக் கொடுமைகளை இழைக்கிறது; மேட்டுக்குடிகள் வாழ வாய்ப்பும் வசதியும் செய்து தருகிறதே தவிர, 'தொழிலாளர் பெருமக்களை வாட்டி வதைப்பதுதான் அதன் தொழில்', என்ற கூக்குரல்தான் புரட்சிக்குக் கருப்பொருள்; இது ஒப்புக்கொள்ளக்கூடியதாகவும் இருந்தது. ஆனால் புரட்சியின் பயனாய்த் தோன்றிய 'போல்ஷ்விக்கு'களின் [லெனின் கட்சியினர்] ஆட்சியோ பதவிக்கு வந்தவுடனேயே மன்னர் பரம்பரையை அழித்ததுடன், பண்ணைக்காரரின் வமிசத்தினரை, நிலச்சுவான்தாரின் கூட்டத்தை, மதகுருக்களின் மரபை பூண்டோடு பொசுக்கிக் காட்டியது. ஒரு பகுதியினர் வாழ, ஏனைய பகுதியினரை- ஒரு மரபினர் வாழ, ஏனைய மரபினரை - அழிக்கும் வேலையில் ஈடுபட்டது அந்த ஆட்சி. இந்தத் தத்துவம் உண்மையான 'மார்க்சியக் கொள்கை'க்கு முற்றிலும் முரண்பாடாக அமைந்துவிட்டது. அதனால்தான் ருஷ்யாவின் 'மக்களாட்சி' அரசியமைப்பில் உலகத்திற்கு ஐயப்பாடுகள் தோன்றலாயின.

ருஷ்யாவின் ஆட்சி அமைப்பில் அதிகாரம் முழுவதும் சோவியத் தலைமைச் சங்கம் **(Congress of Soviet)** என்னும் தலைமை நிலையத்திடம் உள்ளது. இந்தத் தலைமை நிலையத்திற்கும் சட்ட சபைக்கும் உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கும் முறையிலே, விசித்திரமான ஜனநாயகம் தொக்கிக் கிடப்பதைக் காணலாம். நகர்ப்புறங்களிலிருந்து 25,000 தொழிலாளர்களுக்கு ஓர் உறுப்பினர் விதமும், ஏனைய இடங்களிலிருந்து 1,25,000 விவசாயிகளுக்கு ஓர் உறுப்பினர் என்ற முறையிலும் சட்ட சபைக்கு உறுப்பினர் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள்!

மக்கள்தான் சட்டசபைக்கு உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கிறார்கள் என்ற பொருளே ஒழிய, அந்தத் தேர்தல் ஜனநாயக முறைக்கு எவ்வளவு முரண்பாடானது என்பதைப் பின்காணும் செய்திகளால் அறியலாம். தேர்வு அபேட்சகராக (**candidate**) நிற்பவர் அனைவரும் பொதுவுடைமைக் கட்சியைச் சார்ந்தவர்கள். தப்பித்தவறி, கலைக் கழகங்களின் சார்பிலும், இளைஞர் சங்கங்களின் சார்பிலும் ஓரிருவர் போட்டியிடுகிறார்கள் என்றாலும் அவ்வமைப்புகள் அனைத்தும் மத்திய பொதுவுடைமைக் கட்சியின் கிளைகளேயாதலால், அவர்களும் ஒரே குட்டையில் ஊறிய மட்டைகளாக இருக்கிறார்கள்! எனவே இங்கு நடக்கும் தேர்தலில் ஆளும் கட்சிக்கு எதிராக ஒருவரும் போட்டியிடமாட்டார்கள். காரணம் எதிர்க்கட்சி என்பதே இல்லை. அப்படியே மீறி, ஆண்மையுடன் நிற்பவரையும் ஆட்சியாளர்கள் வெளியிலே நடமாட விடுவதில்லை. இந்த மகத்தான தேர்வு முறைதான் ருஷ்ய நாட்டின் மக்களாட்சியிலே நடைபெறும் தேர்வு முறையாக இருக்கிறது.

நாட்டின் ஆட்சிமுறை முழுவதையும் பல பிரிவுகளாக்கி நடத்திச் செல்ல, நடுச் செயற்குழுவால் அமர்த்தப்பட்ட ஓர் அமைச்சரவை அமைக்கப்பட்டிருக்கிறது. இதன் பெயர் மக்கள் கமிஷார்ஸ் (**People's Commissars**) என்பது. இந்த அவையைப் பற்றி உள்ள அதிசயம் என்னவென்றால், இதன் 15 உறுப்பினர்களும் சட்டசபையால்தான் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள் என்ற பெயரே ஒழிய, இவர் இவர்தான் இதில் அங்கம் வகிக்க வேண்டுமென்பதை மத்திய கம்யூனிஸ்டுக் கட்சிதான் நியமிக்கிறது. அவர்கள்தான் தேர்ந்தெடுக்கவும் செய்வார்கள். இங்ஙனம் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள் மத்திய பொதுவுடைமைக் கட்சியின் செல்வாக்கைப் பெற்றிருக்கும் நாள் வரையில், பதவித்தடாகத்திலே தனி நீச்சல் அடித்துக் கொண்டிருப்பார்கள். அவர்கள் எதையும் செய்ய உரிமை பெற்றிருப்பார்கள்.

பிரஞ்சு நாட்டிலே லூயி மன்னர்களைப் பற்றி படிக்கும்போதுதான், அவர்கள் இந்த முறையில் குறிப்பிட்ட சில பிரபுக்களுக்குப் பெருவாரியான அதிகாரம் தந்ததாகப் பார்த்திருக்கிறோம். ருஷ்யாவின் மக்களாட்சியிலும் இந்த வழக்கத்தைக் காண்கிறோம். விந்தைதான்!

மற்றும் இந்தியத் துணைக்கண்டத்தினைக் காட்டிலும், ருஷ்ய நாட்டின் மத்திய அரசாங்கம் எல்லா அதிகாரங்களையும் தன்னிடமே குவித்து வைத்துக்கொண்டுள்ளது. பெயர்தான் சமதர்மக் குடியரசுகளின் இணைப்பு(**Union of Socialist Soviet Republics**) என்பதே ஒழிய, மத்திய அரசாங்கம்தான் வெளிநாட்டுக் காரியங்கள், பாதுகாப்பு, இணைப்பு அரசாங்கத்துடன் புதிய குடியரசுகளைச் சேர்த்தல், வாணிபம், நாட்டின் பொருளாதாரத் திட்டங்களை வகுத்தல், வரிவிதிப்பு, போக்குவரத்து, குடிமை, நீதிமுறை, தண்டனைச் சட்டங்கள் ஆகிய அனைத்தையும் கவனிக்கிறது. அது மட்டுமல்ல, மாநிலங்களின் கல்விமுறை, மருத்துவத்துறை ஆகியவை பற்றித் தீர்மானிப்பதும் அதன் கையில்தான் உள்ளது. மாகாணங்களுக்கோ, வசதிக்கேற்றவாறு தங்கள் அரசியல் அமைப்பை மாற்றிக்கொள்ள கிஞ்சித்தும் அதிகாரம் கொடுக்கப்படவில்லை. ஸ்விட்சர்லாந்து நாட்டிலே 50,000 மக்கள் மட்டும் விரும்பினால், அரசியலமைப்பிலே மாற்றங் காணமுடிகிறது. ஆனால், 'மக்களாட்சி' நடைபெறும் இங்கே, ஒரு மாகாணம் முழுவதும் முன்வந்தாலும், தான் விரும்பிய மாற்றத்தைப் பெற இயலவில்லை. பின் இதை எப்படி நாம் 'சமதர்மக் குடியரசுகளின் இணைப்பு' என்று ஒப்புக்கொள்ள முடியும்?

மற்றும் 1924 ல் தீட்டிய ருஷ்ய நாட்டு அரசியல் திட்டப்படி எந்த ஒருகுடியரசும், தான் இணைந்திருக்க விரும்பாவிடில், இணைப்பிலிருந்து பிரிந்து செல்லலாம் என்று இருக்கிறது. ஆனால் ஆட்சிக்கு எதிராகச் சிறு குரல் எழும்பினாலும் 'தேசத்துரோகம்' என்று கருதப்படும்போது, எப்படிப் பிரிவினைக்கிளர்ச்சி தோன்றமுடியும்? அப்படி ஏதேனும் உரிமைப்போர் கிளர்ந்தெழுந்தாலும் மத்திய அரசாங்கம் அதை எப்படியெல்லாம் மண்ணோடு மண்ணாக்கிவிடுகிறது என்பதை அண்மையிலே நடைபெற்ற அங்கேரி நாட்டு விடுதலைப்போர் நமக்கு உணர்த்திற்று.

## நாட்டிலே காட்டாட்சி; நாடு விழுங்கும் பேராசை!

'புடாபெஸ்ட்' நகரிலே சுய உரிமை கோரியவர்களை ஆதிக்கக்காரர்களின் துப்பாக்கிக் குண்டுகள் துளைத்ததைச் சென்ற ஆண்டு அக்டோபரில் கண்டோம். **A. V. H.** அலுவலகத்திலிருந்து ஏதேச்சாதிகார சின்னத்தை வெளியேற்ற முனைந்ததற்காக மட்டும், பிறந்த பொன்னாட்டினரை-எண்பத்தைந்து பேரை - ஒரே சமயத்தில் தூள் தூளாக்கி இருக்கிறது 'சோவியத்'படை. என்னதான் குழப்பக்காரர்களை ஒடுக்குவதானாலும் மக்களின் நன்மைக்காக நடைபெறும் ஒரு மக்களாட்சி இத்தகைய படுகொலைகளைச் செய்யமுடியுமா? ஆகவே ருஷ்ய நாட்டு அரசியலமைப்பைப் பொறுத்தவரை, ஏட்டிலே தீட்டப்பட்ட சட்டங்களுக்கும், நாட்டிலே நடைமுறையிலே இருக்கும் திட்டங்களுக்கும் இடைவெளி வெகுதூரம் இருக்கும் காரணத்தால், நாம் இதை ஓர் ஏதேச்சாதிகார ஆட்சி என்றுதான் கூறவேண்டியவர்களாகிறோம்.

நீதித்துறை பற்றி எடுத்துக்கொண்டாலும் ருஷ்ய நாடு ஏனைய நாடுகளிலேயிருந்து தனியே விலகிவிடுகிறது. இங்குள்ள சிறிய நீதிமன்றங்களிலிருந்து உயர்தர நீதிமன்றங்கள் வரை, யாவும் பொதுவுடைமைக் கட்சியின் காவலாளிகளாகவே உள்ளன என்று கூறலாம். மக்கள் கூட்டத்தைப் பொதுவுடைமைக் கட்சிக்கும், அதன் கோட்பாடுகளுக்கும் அடங்கி இருக்கச் செய்வதுதான் இவர்களின் முக்கிய வேலை!

ஆட்சிமுறை, ஒரே கட்சியிடம் பல்லாண்டுகளாக நிலைத்திருக்கும் காரணத்தால் அந்தக் கட்சியின் கட்டளைகளுக் கிணங்கவே, சட்டங்களும் வரையறுக்கப்படுகின்றன. நீதிபதிகளும் மக்களால்தான் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள் என்ற பெயர் இருந்தாலும் பொதுவுடைமைக் கட்சியின் செல்வாக்குப் பெற்றவர்களே அவர்கள். எனவே இம்மன்றங்கள் அதிகாரப் பிரிவின் ஒரு பகுதியாக உள்ளதேயன்றி, உண்மையில் நேர்மையையும் நீதியையும் நிலைநாட்டுவதாக அமைய வாய்ப்பில்லை!

அதேபோல்தான், இந்த இருபதாம் நூற்றாண்டிலும் ருஷ்யாவின் மக்களாட்சியில், எழுத்துரிமைக்கும் பேச்சுரிமைக்கும் முழு இடம் அளிக்கப்படாத ஓர் அதிசயத்தைக் காண்கிறோம். இங்கே உள்ள நாளிதழ் முதல் அத்தனை இதழ்களும் சோவியத் சங்கத்தினைச் சேர்ந்தவையே. ஏனைய ஒரு சில பத்திரிகைகளும், அதன் கிளைக் கழகங்களுக்கு உரிமையானவையாக இருக்கின்றன. ஆக மொத்தத்தில் அவை அனைத்தும் பொதுவுடைமைக் கட்சியின் சாதனைகளை 'பூபாள' ராகத்தில் பாடுமே ஒழிய, குறைகளை எடுத்துக்காட்ட அவைகளுக்கென்ன சித்தப்பிரமையா பிடித்திருக்கிறது! இங்ஙனம் யாரேனும் தனிப்பட்டோர், இக்கொள்கைக்கு மாறாகப் பேசினாலும், எழுதினாலும் அவர்கள் வெளியுலகில் வாழ முடியாது. எனவேதான் இத்தகைய ஆட்சிக்குப் பொருள் மக்களாட்சி என்றால், நாம் படித்த அகராதிகள் பொய்த்துப் போகின்றன!

இவ்வளவு செல்வாக்கும் உரிமையும் பெற்றிருப்பதாகக் கூறிக்கொள்ளும், உலக மக்களின் வழிகாட்டியான, ருஷ்யப் பொதுவுடைமைக் கட்சியில் எத்தனை பேர் அங்கத்தினர்கள் இருக்கிறார்கள் என்றால், உண்மையிலேயே அதிர்ச்சியாக இருக்கும். ஏறத்தாழ 200 மில்லியன் மக்கள் கொண்ட ருஷ்ய சமதர்மக் குடியரசில் 2 மில்லியன் மக்களே அதன் உறுப்பினர்கள் என்னும்போது உண்மையிலேயே அதன் செங்கொடியிலே உள்ள சம்மட்டி நம் தலைமீது விழுவது போன்ற பிரமை ஏற்படுகிறது.

மற்றும் இந்த அளவுக்கேனும் பொதுவுடைமைக் கொள்கையை மக்கள் கடைப் பிடிக்க வேண்டுமென்று ஆட்சியாளர்களால் எத்தனையோ முறைகள் கையாளப்படுகின்றனவாம். ஒவ்வொரு பாட்டாளியின் குழந்தைகளுக்கும் இந்தக் கொள்கையை ஊட்டி, இதே சூழ்நிலையில் வளர்ப்பதற்காக, அனேக சங்கங்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன ஆட்சிபீடத்தால்! ருஷ்யப் பொதுவுடைமைத் தத்துவத்தைப் போதிப்பதற்கெனவே. 10 முதல் 16 வயது வரையுள்ளவர்க்குச் சிறுவர் சங்கங்களும், 14 முதல் 23 வயது வரையுள்ளவர்க்கு இளைஞர்சங்கங்களும் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. அப்படியெல்லாம் இருந்தும் அதன் உறுப்பினரின் எண்ணிக்கைதான் பரிதாபப்படும் நிலையில் இருக்கிறது!

எந்தக் கோணத்திலிருந்து பார்த்தாலும், நாடாள்வோரின் குற்றங்களை எடுத்துக் கூற எதிர்க்கட்சி என்று ஒன்று இருக்கவேண்டும். காலப் போக்கில் இக்கொள்கை மிக மிக அவசியமாகவும் ஆகிறது. ஆனால் ஜார் மன்னர் பரம்பரைக்கு எதிர்க்கட்சியாக இருந்த இந்தப் பொதுவுடைமையினர், தங்கள் ஆட்சியில் மட்டும் வேறொரு எதிர்க் கொள்கையுடையோர் வாழக் கூடாது என்கிறார்கள். 1937-ல் நடைபெற்ற பொதுத் தேர்தலில் பொதுவுடைமைக் கட்சிக்கு ஓரிடத்திலும் எதிர்ப்பாளரே நிற்கவில்லையாம்! பெருங் கவிஞன் டென்னிசனின் கருத்துப்படி, எந்த ஒரு மகத்தான கொள்கையும் ஒருகாலத்தில் பழமையானதாகவும், மாற்றப்படவேண்டிய நிலையையும் பெறலாம். ஆனால் ருஷ்யக் கம்யூனிஸ்டுகளோ, தாங்கள் கையாளும் கொள்கைதான் தலைசிறந்தது, உயர்ந்தது என்று கருதிக்கொண்டு மாற்றுக் கொள்கையுடையோரையும், வேறு கட்சியினரையும் வளரவிடாமல் அடியோடு அழித்து விடுகிறார்கள். உண்மையிலேயே மக்களின் நலனுக்காக நடைபெறும் ஆட்சியில், இந்த முரட்டு மனப்பான்மை நிலவுவது ஆபத்தில்தான் கொண்டுபோய் முடிக்கும்.

மொத்தத்தில் ருஷ்யநாடு பொதுவுடைமைக் கட்சியின் சர்வாதிகாரம் நடைபெறும் நாடு என்பதை விளக்க, கீழ்க்காணும் படிப்படியான கட்டங்களேபோதும். ஏனைய நாடுகளைப் போல, மக்களாலேயே சட்டசபைக்கு உறுப்பினர் தேர்ந்தெடுக்கப்பட்டாலும் அவர்களெல்லாம் 'பாலிட்பீரோ' (**Polite Bureau**) என்னும் குழுவால் நியமிக்கப்படுகிறார்கள். இங்ஙனம் சட்டசபைக்குச் செல்லும் அங்கத்தினரில் பொதுவுடைமைக் கட்சியின் பெரும் செல்வாக்கைப் பெற்றவர்கள் 'மக்கள் கமிஷார்' சபையில் இடம் பெறுகிறார்கள். இப்படியெல்லாம் பேரதிகாரம் பெற்றிருக்கும் 'பாலிட்பீரோ'வின் அங்கத்தினர்களோ, ருஷ்யக் கம்யூனிஸ்டுக் கட்சியின் பொதுச் செயலாளரால் நியமிக்கப்படுகிறார்கள். ஆக, பொதுச் செயலாளர்தான் நாட்டின் நாயகர்-அனைத்தையும் ஆட்டிவைக்கும் காவலர்-ருஷ்ய நாட்டின் தலைவிதியை நிர்ணயிக்கும் சர்வாதிகாரம் பெற்றவர்!

ஆதலால், ருஷ்யப் பொதுவுடைமையினரின் ஆட்சியமைப்பு ஒரு கட்சியைத் தவிர, மற்றவற்றை வளர விடாது!

ஒரு குறிப்பிட்ட இனத்தைத் தவிர, ஏனையவற்றை இருக்க விடாது!

இப்படிப்பட்ட ஆட்சியை எப்படி நாம் 'உலகின் முற்போக்கு சக்தி' என்று ஒப்புக் கொள்ள முடியும்?

எனவேதான், 'சிட்னிலைப்' என்ற அறிஞரின் கூற்றுப்படி, **'ருஷ்ய நாட்டில் பாட்டாளிகளின் சர்வாதிகாரம், பொதுவுடைமைக் கட்சியினரின் சர்வாதிகாரமாக மாறிவிட்டது'** என்ற முடிவு உறுதியாகிறது. ★

### பொதுச்செயலாளர் அனுதாபம்

திராவிட முன்னேற்றக் கழகப் பொதுச்செயலாளர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள் டாக்டர் பி. வரதராசலு (நாயுடு) அவர்கள் மறைவு குறித்து அறிவிப்பதாவது :—

தமிழகத்தில் அரசியல் விழிப்புணர்ச்சி ஏற்படுத்த அடிப்படைக் காரணமாக விளங்கியவர்களிலே முக்கியமான ஒருவரும், தமிழ்ச் செய்தித் தாள் உலகைச் செவ்வையாக்கிச் சீர்படுத்திப் பல எழுத்தாளர்களுக்கு ஆசிரியராயும் எடுத்துக்காட்டாயும் விளங்கியவரும், தமிழ்மொழி வளர்ச்சிக்கு அரும்பாடுபட்டவரும், தொழிலாளர் நலன் கருதி உழைத்து வந்தவரும், பிற்படுத்தப்பட்ட மக்கள்-ஒடுக்கப்பட்ட மக்கள் முன்னேற்றத்திற்கு அரும்பாடுபட்டவரும், யாருக்கும் அஞ்சாமல் துணிந்து செயலாற்றும் திறம் படைத்தவரும், மாற்றக் கட்சியினராலும் நன்கு மதிக்கப்பட்டவருமான அருந்தலைவர் டாக்டர் வரதராசுலு அவர்கள் இயற்கை யெய்திய செய்தி கேட்டுத் திடுக்குற்றேன்.

துக்கமும் துயரமும் உள்ளத்தைக் குடைகின்றன. தமிழகம் ஒரு அரசியலறிஞரை இழந்து தவிக்கும் நிலை அவரது இழப்பால் ஏற்பட்டுள்ளது. அவரைப் பிரிந்து வருந்தும் அவரது குடும்பத்தினருக்கும், உற்றார், உறவினர் நண்பர் ஆகியோருக்கும் எம் ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக்கொள்வதைத் தவிர வேறு என்ன ஆறுதல் மொழிய இயலும்.

அவரது தொண்டுகள் பிறர்க்கு எடுத்துக்காட்டுக்களாக அமையுமாக! அவரது பெயரும், புகழும் நீடூழிக் காலம் நிலை பெறுவதாக!

**நண்பர்களே,**

**பணம் வருகிறது.**
**பறந்து போகிறது.**
**சம்பாதிக்க ஓடுகிறோம்.**
**சம்பாதிக்கிறோம்.**
**செலவழிக்கிறோம்.**
**அதில் ஒரு ரூபாய்...**
**இரண்டு ரூபாய்...**
**ஐந்து ரூபாய்...**
**தமிழையே கற்று.**
**தமிழுக்கே உழைத்து.**
**தமிழ் வடிவில் இயங்கி,**
**கொள்கைப்பற்றுக் கொண்டு**
**தடியடிகளைத் தாங்கி,**
**வறுமையில் அவதிப்படும்**
**மாபெரும் புலவருக்குத்**
**தரக்கூடாதா ?.**
**அண்ணு பொருளாளர்**
**நாவலர் செயலாளர்**
**விழாக்குழு உருவாகிறது.**
**உயிருள்ளபோதே மரியாதை.**
**உங்கள் பங்கு ?**
**மனமிருந்தால் வழியுண்டு;**
**மனம் இருக்கிறதா ?**
**செயல்படுத்துங்கள்**

நிதி அனுப்ப முகவரி :

**சி. என். அண்ணுதுரை,**
**' அறிவகம் '**
**24, சூரியநாராயண செட்டி தெரு,**
**சென்னை-13.**








அன்புள்ள தாமரை,

நான் முன்பு எழுதிய கடிதத்தை நீ படித்திருக்கலாம். உன்னிடமிருந்து பதில் எதுவும் எனக்குக் கிடைக்கவில்லை. ஆனால், உன்னுடைய எழுத்துக்களைக் கொண்ட கடிதம் ஒன்று மட்டும், வந்து சேர்ந்தது. முறையாகவும், கோர்வையாகவும் அடுக்கப்பட்டிருந்த எழுத்துக்களையும், அதனைத் தாங்கி வந்த அஞ்சல் உறை முத்திரையையும் பார்க்கும் போது, அது உனது கடிதமாகத் தெரிந்தாலும், கையெழுத்திடப்படாத அந்தக் கடிதம் சொல்லும் செய்திகளைப் படித்தால், என்னால் அது உன்னுடைய கடிதம்தான் என்று மனதார ஒத்துக் கொள்ள முடியவில்லை.

நீயும் நானும் உலவிய அந்நாள் நினைவுகள், எனது நெஞ்சைநிறைக்கின்றன. சின்னஞ் சிறு பிராயம் முதல் உன்னை நான் அறிவேன். ஆரம்பப்பள்ளிக்கூடத்தில் நம்முடைய உறவு வலுப் பெற்றது. அப்பொழுது நாம் ஒன்றாகவே உலவினோம்.

பிறகு நாம், உயர்நிலைப் பள்ளிப் படிக்கட்டுகளில் கைகளைப் பிணைத்துக் கொண்டு நடந்தோம். அங்கே என்னுடைய கவனங்கள், செயல்கள் அனைத்தும் உன்னையும், படிப்பையும் கூட விட்டு விட்டு, வேறு துறைக்குப் பயன்படத் தொடங்கின. மாணவ சகோதரர்களின் உரிமைகள் பாதுகாக்கப்பட வேண்டும், என்று நான் எண்ணினேன். எப்பொழுதும் பள்ளிக்கூடத்திற்குத் தேவையில்லாத புத்தகங்களையே படித்தேன். இங்கே இருந்து கொண்டே பிரஞ்சுப் புரட்சியையும், அமெரிக்க எழுச்சியையும், ரஷ்ய மறுமலர்ச்சியையும் பற்றிய கனவுகளில் ஆழ்ந்தேன். எல்லா நேரங்களிலும், இந்திய மண்ணிற்கு அப்பால் வளர்ந்து பயன் தந்துகொண்டிருக்கும் சுதந்திர விருட்சங்கள் பற்றி உரையாடினேன். ஐரிஷ்காரர்களின் இலட்சிய வரலாற்றையும், கிரேக்க மாஜி கடவுள்களையும், ஆதிபத்திய வாதிகளின் நிலையையும் நினைப்பையும் பற்றியே சிந்தித்தேன். மாணவர்களுக்கான அமைப்பின் செயலாளனுனேன். முறையாக விளக்கம் பெருத எனது தோழர்கள்-என்னைப் பின்பற்றுவதாக சொல்லிக்கொண்ட மாணவர்கள்-அவசரமாகத் தம் சக்திக்கும், அவசியத்திற்கும் மீறியசெயல்களில் ஈடுபட்டனர். விளைவு; நாங்கள் வெறுத் தொதுக்கப்பட்டவர்களானோம். அபாய அறிவிப்புகளாக மாணவர்களுக்கு அறிமுகப்படுத்தப்பட்டோம். என்னுடைய தோழர்களை-என்னை நெருங்க, மற்ற மாணவர்கள் அஞ்சினர். நீ கூட, அதே காரியங்களில் நான் தொடர்ந்து ஈடுபட்டால், என்னோடு பேசுவதையே நிறுத்திக் கொள்வதாகச் சொன்னாய். எனது தோழர்களின் தவறு, மாணவர்களின் அறியாமை, பயம் இவை எங்களிடமுள்ள நியாயங்களைப் பிறர் அறிய முடியாதபடி தடுத்து விட்டன. யாருக்காக நடைபெறுகிறதோ, அவர்களின் ஆதரவே கிடைக்கவில்லை எனில், எந்தப் போராட்டம் வெற்றிபெறும்! மாணவர்களின் ஆதரவு கிடைக்க வழியில்லை. எங்களின் பலமின்மை, பொதுச் சொத்தை விழுங்கி ஏப்பமிடும் அந்தத் தலைமை ஆசிரியருக்குப் புரிந்து விட்டது. பழி வாங்கும் படலம் தொடங்கியது! பதினெட்டுப் பேராகிய எங்களில், பதினறு பேர் மன்னிப்புக் கடிதம் எழுதித் தந்து 'நல்லவர்'களாக 'ஞான ஸ்நானம்' பெற்றுக் கொண்டார்கள். நானும் மற்றொருவனும் மட்டும் எஞ்சி நின்றோம். பின்னர் அவனும் ஏதோ காரணங்களால் அந்தப் பட்டியலில் சேர்ந்து கொண்டான். சிறு வயது முதலே எவருக்கும், எதற்கும் அஞ்சாமல் செயல்பட்ட எனது 'வணங்காமுடி'ப் பண்பு, மன்னிப்புக் கடிதம் எழுதித் தர இடம் கொடுக்க மறுத்துவிட்டது. பிறகு தடை செய்யப்பட்ட ஒரு அமைப்போடு என்னைத் தொடர்புபடுத்தித் தலைமை ஆசிரியர் தந்த தகவலின்படி போலீசார் என் வீட்டை முற்றுகையிட்டனர். சோதனையில் நான் எந்தத் தலைவரின் பொன்னடியை இன்றளவும் பின்பற்றுகிறேனே, அவர் எழுதிய கட்டுரைகள், பத்திரிகைகள் தொகுப்பை அவர்கள் எடுத்துச் சென்றனர். சில மாதங்களில் எப்படியோ, எனக்குச் சம்பந்தமில்லாத ஏதோ காரணங்கள் காட்டப்பட்டு, நான் பழிவாங்கப்பட்டேன்-படிப்பிலிருந்து நிறுத்தி வைக்கப்பட்டேன் கல்வி ஒளி பரவப் பணியாற்றுபவர்களால். இனி அந்தப் பக்கமே தலை வைப்பதில்லை என்று, கால் போனதிக்கில் நடந்தேன்.

ஒரு ஆண்டுக்குப் பிறகு, சில அனுபவங்களோடு அதே பள்ளியில் நான் காலடி வைத்தபோது, அங்கே நீ இல்லை. உன்னைப்பற்றிய நினைவுகளும் என்னை வாட்டவில்லை. நான் 'மதவேள்கணை'யால் தாக்கப்பட்டு, உன்னை நினைந்து 'எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணி ஏங்க'வுமில்லை! எத்தனையோ சினிமாப் படங்கள் பார்க்கிறோம். அவற்றில் வந்தவர்களெல்லாம், இதயத்தைவிட்டு மறையாமலேயா நின்றுகொண்டிருக்கிறார்கள்?

சில ஆண்டுகளுக்குப் பிறகு ஒரு நாள். வெளியூருக்குச் செல்ல, ரயிலடியில் நின்றுகொண்டிருந்தபோது உன் அன்னையைச் சந்தித்தேன். என் மீது எப்பொழுதும் அன்பு செலுத்தும் அவர்கள், நெடுநேரம் உரையாடிக் கொண்டிருந்தார்கள். 'எங்கு வந்தீர்கள்?' என்று நான் விசாரித்தேன். தனியாக நீண்டதூரம் போகும் உன் அக்காவை வழியனுப்ப வந்திருப்பதாகச் சொன்னார்கள். சொல்லிவிட்டு, என்னை அறிமுகம் செய்து வைப்பதற்காக, உன் அக்கா நின்றுகொண்டிருந்த பக்கம் திரும்பினார்கள். உன் அக்கா அங்கே இல்லை! அவர்களுக்குப் பதிலாக அங்கே நீ நின்றுகொண்டிருந்தாய்! அப்பொழுது முதலே என் மனதில் நீ நின்று விட்டாய் என்பது, எனக்கு இன்னும் நினைவிருக்கிறது.

'இவள் தெரியுமல்லவா...?' சிரித்துக்கொண்டே உன் அம்மா கேட்டார்கள்.

'ஏன் தெரியாது?...தாமரை! ஆனால் நான், இவளது அக்காதான் இங்கே நின்றுகொண்டிருக்கிறார்கள் என்று நினைத்தேன்-அவ்வளவு பெரியவளாக இவள் வளர்ந்திருப்பது எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது!...' என்றேன் நான்.

அப்பொழுது, நாணம் கலந்த பார்வை ஒன்று, என் மீது பட்டுத் தெறித்தது. அதன் சொந்தக்காரி நீ என்பது, நான் சொல்லியா தெரிய வேண்டும்!

உங்கள் வீட்டுக்கு அடிக்கடி வரும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது பல காரணங்களால். இரண்டு மூன்று முறை, நான் எங்கு தேடியும் நீ அகப்படவில்லை. ஏமாற்றத்தோடே திரும்பினேன்.

ஒரு நாள்-அந்த நாளை நீ அவ்வளவு சிக்கிரம் மறந்திருக்கமாட்டாய்-நான் வந்தேன். உன்னைக் கண்டேன். உரையாடி மகிழ்ந்தோம். நீ தந்த தோட்டத்துப் பழங்களை நான் உண்டு மகிழ்ந்தேன். நீ அன்று எனக்காகப் பாடினாய்.

பல நாட்கள் நாம் சந்தித்தோம். உன்னைப் பார்க்காமல் என்னால் இருக்க முடியவில்லை. பார்வைகளின் மூலமே, 'நினைத்து நினைத்து மகிழும் விதத்தில்' நமது நேசம் வளர்ந்தது. ஆனால் 'உனக்காக நான்...எனக்காக நீ' என்ற உறுதிப்பாட்டை மட்டும், நாம் செய்து கொள்ளவில்லை. அந்தத் துணிவு உனக்கு எப்படியோ, எனக்கு வரவில்லை!

ஏற்றுக் கொண்ட வேலை காரணமாக, நான் உன்னை விட்டுப் பிரிந்தேன். சினிமாவில் காட்டப்படும் மந்திரக் கதைகளில், ஒருவனுடைய உயிரின் சூட்சமத்தை, ஏழு கடல்கள், மலைகளுக்கு அப்பால் வைத்திருப்பார்களே அதுபோல, என்னுடைய எல்லாவற்றையும் நூற்றுக்கணக்கான மைல்களுக்கு அப்பால் வைத்து விட்டு, நான் நடமாடினேன். உன்னுடைய நினைவில் சில காலம் ஓடியது. பிறகுதான் எனக்கு அந்தத் துணிச்சல் வந்தது. உனக்கு நான் கடிதம் எழுதத் தொடங்கினேன். முதன் முதலில் எழுத ஆரம்பித்தபோது என் மனதைப் பற்றிக் கொண்ட அச்சமும் திகிலும்...!'பதில் வராவிட்டால்...? கடிதம் மற்றவர்கள் கையில் சிக்கிக் கொண்டால்...?'-எழுதிவிட்டு இப்படி எண்ணிக் கொண்டே நாட்களைக் கழித்தேன் நான். உடனேயே உன்னிடமிருந்து பதில் வந்தது. அந்த மகிழ்ச்சி —

கடிதங்கள் தொடர்ந்தன. எல்லாம் 'நலம். நலமறிய விருப்பம்' என்ற முறையிலேயே இருந்தன. திடீரென்று நான் என்னுடைய விருப்பத்தை-உனக்கும் எனக்கும் உள்ள உறவை நிரந்தரமாக்கும் அந்த உறுதியை-உன்னுடைய முடிவை-எழுத்து மூலம் கேட்டேன். உன்னிடமிருந்து, நான் குறிப்பிட்ட நாட்களுக்குள் பதில் வரவில்லை. என்னால் இங்கே, பொறுமையாக உட்கார்ந்துகொண்டிருக்க முடியவில்லை. என்னைப் பயம் பிடித்துக் கொண்டு விட்டது. நான் எனது அலுவல்கள் எல்லாவற்றையும் மறந்து விட்டு, உன்னைப் பார்ப்பதற்காக ஊருக்கு ஓடி வந்தேன். அங்கே நீ இல்லை-வெளியூர் போயிருக்கிறாய் என்று கேள்விப்பட்டேன் அங்கும் நான் வந்தேன். அங்கே நான் சென்றமாலை, நண்பகலிலேயே நீ ஊருக்குப் புறப்பட்டுவந்துவிட்ட செய்தி கிடைத்தது. மறுநாள், நான் உன்னைத் தேடி உங்கள் வீட்டிற்கு வந்தேன். சூழ்நிலை மிகவும் சாதகமாக அமைந்திருந்தது. உன்னைத் தவிர வீட்டில் யாருமில்லை. என்னை நீ மகிழ்வோடு வரவேற்றாய். நான் நிம்மதியாகப் பெருமூச்சு விட்டுவிட்டுக் கேட்டேன்:

'எனது கடிதம் கிடைத்ததா?'

நீ சிரித்தாய். அதன் பொருள் எனக்கு அப்பொழுது விளங்கவில்லை.

'கடிதமா அது!...கதை அல்லவா எழுதியிருந்தீர்கள்!...'-நீ சொன்னாய்.

'முட்டாள் தனத்தை எழுத்தாக்கி உனக்கு அனுப்பிவிட்டேனா...?'-நான் கேட்டேன்.

'யார் அப்படிச் சொன்னது...?'

நீ என்னை விழிகளால் மட்டுமல்லாமல், வார்த்தைகளாலும் தவிக்க வைத்துக்கொண்டிருந்தாய். ஒன்றிற்கும் பிடிபடாமல் வார்த்தைகளில் 'கிளித் தட்டு' ஆடிக்கொண்டிருந்த உன்னுடைய அந்த உரையாடல், மிகவும் ரசிக்கத் தக்கதாக இருந்தது.

கடைசியில் உன்னுடைய முழுச் சம்மதத்தையும் நீயே வாய் திறந்து சொன்னபோது, அடேயப்பா, எவ்வளவு மகிழ்ச்சி தெரியுமா எனக்கு?

'நீ ஏன் உடனேயே பதில் எழுதவில்லை...?'

'முன்பே எழுதி விட்டேனே...!'

' "எண்ணத்தை மாற்றிக் கொள். இது எட்டாக்கனி!" என்று?'

என்னைக் கிறங்க வைக்கும் 'போதை'ப் பார்வையை உமிழ்ந்து விட்டு, நீ சொன்னாய்:

'உள்ளம் இல்லாதவளல்லவே நான்! இதயத்தில் உள்ளதை எழுத்தாக்குவது அவ்வளவு கடினமான காரியமல்ல. 'சம்மதம்' என்றே எழுதிவிட்டேன்!'

நான் உற்சாக உலகில் நடமாடினேன். என்னுடைய நண்பர்களில் பலருக்கு அன்று விருந்து கிடைத்தது!

பிறகு நான் ஊருக்குப் புறப்பட்டேன். நீ ரயிலடிக்கு வந்து, வழி அனுப்பி வைத்தாய். உன்னை என் மனக்கோவிலில் சிலையாக்கிக் கொண்டு, நான் பிரயாணம் செய்தேன்.

இங்கே வந்ததும், நான் முதலில் கவனித்த வேலை, உனது கடிதத்தைத் தேடியதுதான். தங்கியிருந்த அறை முழுவதும் துருவினேன். தபால்காரனைப் பல முறை விசாரித்தேன். கடிதம் வந்த சுவடுகூடத் தெரியவில்லை! அப்பொழுது உனக்குநான், 'நீ என்னிடம் பொய் சொல்லி விட்டாய்! கடிதம் எழுதவேயில்லை. இதற்காக நான் உனக்கு நல்ல தண்டனை தருவதாக முடிவு செய்து விட்டேன்' என்று எழுதினேன்.

அதற்கு நீ எழுதிய பதிலை, இன்னும் என்னால் மறக்க முடியவில்லை:

'எனக்கு உங்களிடம் பொய் சொல்ல வேண்டுமென்ற எண்ணமே யில்லை...தாங்கள் கொடுக்கப் போகும் தண்டனையை, நான்

ப. புகழேந்தி

ஏற்கத் தயாராக இருக்கிறேன். ஆனால், நான் குற்றம் செய்யவில்லை என்பதைத் தாழ்மையோடு அறிவித்துக் கொள்கிறேன்.'

அதற்கு முன் ஒரு கடிதத்தில், நான் உன்னிடமுள்ள பயஉணர்ச்சி







பற்றி எழுதியிருந்தேன். அதற்கு நீ 'என்னிடமுள்ள பய உணர்ச்சியை எடுத்துக் காட்டியதற்கு, மிக நன்றி, நான் இனி பயப்படவே மாட்டேன். என்ன இருந்தாலும் நான் ஒரு பெண் தானே! அதனால் தாங்கள்தான் இப்படிப்பட்ட பய உணர்ச்சிகளையெல்லாம் நீக்க உதவி புரிய வேண்டும்' என்று எழுதியிருந்தாய்.

தொடர்ந்து நான் உனக்கு எழுதினேன். அவ்வளவும் கேலியும் கிண்டலும் நிரம்பிய வார்த்தைக் கோர்வைகள்! உன்னைச் சிரிக்க வைக்க வேண்டும்—மகிழ்ச்சியில் மிதக்க வைக்கவேண்டும் என்பதற்காக, நேரில் நின்று கேலி செய்வது போன்று அதனை நான் எழுதியிருந்தேன். நீ முன்பு அனுப்பி வைத்திருந்த, உனது சின்னஞ்சிறு படத்தைப் பெரிய படமாக அனுப்பும்படியும் கூட, அதில் நான் எழுதியதாக நினைவு. எழுதி அனுப்பி வைத்துவிட்டு, நீ எப்படி அதை ரசிப்பாய், எவ்வளவு மகிழ்வாய் என்ற கற்பனையில் நாட்களைக் கழித்தேன்.

அதற்குப்பதிலாகத்தான், உனது கையெழுத்திடாத அந்தக் கடிதம் வந்து, இன்றளவும் என்னை வாட்டி வதைத்துக்கொண்டேயிருக்கிறது. மகிழ்ச்சியோடு 'கையெல்லாம் நடுக்கத்தால் எழுதவே முடியவில்லை' என்று, உள்ள உணர்ச்சிகளைப் புரிந்து கொண்டு எழுதிய உனது கரங்களே, 'நான் உலகம் புரியாத சிறுமி. இப்படிச் சீர்கேடான முறையில் வாழ்க்கையை அமைத்துக் கொள்ளக்கூடாது' என்ற எழுத்துக்களையும் வடித்திருந்தன. அதுவும், அதை நீயாக எழுதுவது போல் இல்லாமல், பிறரோ உனக்கு அவ்வாறு அறிவுரை பகன்றதாக எழுதியிருந்தாயே, அதுதான் என்னை என்னவோ செய்தது!

அந்தத் திகைப்பிலிருந்து நான் மீள, இன்னும் எனக்கு வழி தெரியவில்லை! உண்மையாகத்தான் நீ அதனை எழுதியிருக்கிறாயா? உன் மனதிற்குச் 'சரி' என்று பட்டுத்தான் நீ அதை எழுத முற்பட்டாயா? என்னால் எதையும் உறுதிப்படுத்த முடியவில்லை! ஏனென்றால், 'உங்களுக்கு என்னைப்பற்றி நன்கு தெரியும் என்று நம்புகிறேன்' என, நீயே ஒரு முறை எனக்கு எழுதியிருக்கிறாய். அந்த 'நீ' எப்படிப்பட்டவள் என்பதை, நீ பலமுறை நிரூபித்துக் காட்டியிருக்கிறாய். நான் எதை, எப்படி நம்புவது?

நீ எப்படியோ! ஆனால், என்னால் மட்டும் உன்னை நிச்சயம் மறக்க முடியவில்லை என்பது, என்றைக்கோ முடிந்த முடிவாகி விட்டது. என்னுடைய தொடர்பு, உனக்குப் பழங்கதையாய், கற்பனையாய், கனவாய்ப் போய்விட்டாலும் கூட, நான் அப்படிப்பட்ட இதயமில்லாதவனாக இருக்க, எப்பொழுதும் விரும்பவில்லை. நீ குறிப்பிட்டிருந்தாய், 'நான் எழுதிய கடிதங்களைக் கிழித்தெறிந்து விடுங்கள்' என்று. அதில் எனக்கு ஆட்சேபணையில்லை! ஆனால், அதைச் செய்வதன் மூலம், என்னுடைய இதயத்தில் சித்திரமாகி விட்ட உன்னை அழித்துவிட முடியுமா, என்பதே என்னுடைய சந்தேகமாக இருக்கிறது.

கொஞ்சம் நினைத்துப் பார்த்தால், உனக்கு என்னுடைய நிலை தெளிவாகும். இன்றைய சமுதாயக் கண்ணோட்டத்தில், நீ என்னோடு பழகவே உரிமை வழங்கப்படாதவள். அந்த அமைப்பின்படி, நீ வெகு தூரம் நிற்கவேண்டியவள். ஆனால் நான் அதையெல்லாமா நினைத்து நடந்து கொண்டேன்?

உன்னைவிட அழகான பெண்கள்?-வேறெங்கும் போக வேண்டியதில்லை-உங்கள் எதிர் வீட்டிலேயே என்னால் காட்ட முடியும்!

உன்னைவிடப் படித்தவர்கள்?-உனக்கு நான் சொல்ல மறந்துவிட்டேன்-எனக்குத் திருமணம் செய்ய முடிவு செய்த, எனது தந்தை பார்த்த முதல் பெண்ணே ஒரு பட்டதாரி; வத்சலா அவளுடைய பெயர். கேரளத்துக் கிளி மொழி! உலகெங்கும் அப்படிப்பட்டவர்கள் கிடைப்பார்கள்.

பண வசதி உடையவர்கள்?-உறவினர்களிலேயே பலர் உண்டு.

இவை எல்லாம் உனக்கு மிக நன்றாகத் தெரிந்த சேதிதான்!

பணம், படிப்பு, பகட்டு-இவற்றிற்காக உன்னைக் காதலித்தாலல்லவா, நான் இந்த லாப நட்டக் கணக்கைப் போட்டுப் பார்க்க வேண்டும்! இவற்றையெல்லாம் மீறிய ஒன்றல்லவா, 'பூச்செண்டு நீ, பொன் வண்டு நான்' என்று என்னைப் பாட வைத்தது!

எப்படியோ, எந்தக் காரணத்தாலோ, எனக்கு உலகின் மீது முன்பே வெறுப்பு ஏற்பட்டு, நான் மனதால் துறவியாகிக் கொண்டிருந்தேன். அதை அடிக்கடி தடுத்து நிறுத்திக்கொண்டிருந்ததே, 'நினைக்கும் பொழுது, மனம் இனிக்கும் விதத்தில் சுகம் அளிக்கும்' உனது நினைவுகள் தாம். இப்பொழுதோ, தடுத்து, நிறுத்த ஆளின்றி, அந்தப் பாதையிலேயே 'முருங்கை மரத்து வேதாள'மாகி விட்டிருக்கிறது மனம். இனி முடிவு, முடிவுதான்!

என்னிடத்தில் எஞ்சி நிற்பவையெல்லாம் 'நான் ஒருவளைக் காதலித்தேன். அவளும் என்னைக் காதலித்தாள்' என்ற நினைவுகள்தான்.

கடைசியாக, உனக்கு நான் விரும்பித் தெரிவிப்பதெல்லாம் இதுதான்:

"நான் செத்துக்கொண்டிருக்கிறேன். உன்னுடைய நினைவுகள் என்னைச் சாவுக்கு அருகில் இழுத்துச் சென்று கொண்டிருக்கின்றன. உன்னை எதிர்பார்த்து, ஏமாந்து போன என்னைச் சாவு அணைத்துக் கொள்ளத் தயாராகி, எனது உடலையும், உள்ளத்தையும் வாட்டத் தொடங்கி விட்டது. ஊரில் வேகமாகப் பரவும் விஷக் காய்ச்சல் அதற்குத் துணை நிற்கிறது. இன்றோ நாளையோ அல்லது இன்னும் ஒரு வாரத்துக்குள்ளோ என்னுடைய முடிவை, நான் நெருங்க வேண்டி வந்து விடும்! ஆனால், அதற்கு முன்னால், உன்னுடைய அழகிய கையெழுத்தோடு, 'நான் உங்களை இன்னும் காதலிக்கிறேன்' என்ற கடிதத்தையாவது அனுப்பிவை! முன்பு நான், உன்னையே அழைத்தேன். இப்பொழுது நீ வரவேண்டியதில்லை-உன்னுடைய கடிதம் வந்தால் போதுமானது. அதைப்பெற்ற மகிழ்ச்சியோடே 'எனக்கு இப்பொழுதும் ஒரு காதலி இருக்கிறாள்' என்ற நினைவோடு, நான் நிம்மதியாகக் கண்ணை மூடிக் கொள்ள முடியும். இதையாவது செய்வாயா?"

உனக்கு எனது அன்பான வாழ்த்துக்கள்!

என்றும் உன்,

**அன்பு அத்தான்.**

# பாதி பாதி!

பட்டினி கிடந்து எதையும் சாதிக்கமுடியாது.

**-சி. சுப்ரமணியம்.**

ஆமாமா! காங்கிரஸ்காரர்கள் நிறையச் சாப்பிட்டே சாதிக்க முடிவதில்லையே? பட்டினி கிடந்து என்ன சாதித்துவிடப் போகிறார்கள்?

**-விஷயம் தெரிந்தவர்.**

★

ரூ. 100 கோடிக்கு பொது மக்களிடம் இந்திய அரசாங்கம் கடன் திரட்டுகிறது.

**-செய்தி.**

சே, சே, சே! இது பெரிய 'கடன்கார சர்க்கார்' போலிருக்கு!

**-கடன் தந்து நொந்தவர்.**

★

இன்னும் 5 வருடத்துக்குப் புது ரெயில் பாதை இல்லை.

**-பக்தவத்சலம்.**

தொலையட்டும்! பழய ரெயில் பாதையாவது சரியாக இருக்குமா?

**-சந்தேகி.**

★

மந்திரி சுப்ரமணியம், ஈ. வே. ரா. பெரியார் சந்திப்பு.

**-செய்தி.**

யாருக்கு வெடி வைக்கத் திட்டம் போட்டார்களோ?

**-பயந்தவர்.**

★

பெண் பைத்தியங்களுக்குத் தனி ஆஸ்பத்திரி ஏற்படுத்தப் படுமா?

**-காங்கிரஸ் எம். எல். ஏ.**

ஆமாமா! கட்டாயம் ஏற்படுத்தவேண்டும். அதுவும் புதிதாக வந்திருக்கும் காங்கிரஸ் பெண் எம். எல். ஏ.க்களில் சிலருக்குத் தேவைப்படுவதாகத் தெரிகிறது.

**-விஷயம் தெரிந்தவர்.**

★

...கிழவர்களுக்கு மாதா மாதம் 'வாழ்க்கைப்பணம்' கொடுத்து உதவிசெய்ய உத்தர பிரதேச சர்க்கார் முடிவுசெய்து உள்ளது.

**-செய்தி**

அந்த முறை சீக்கிரமே தமிழ் நாட்டுக்கும் வந்தால் நலமாக இருக்கும்.

**-ஈ. வே. ரா.**

★

கோவிலில் கும்பாபிஷேக விழாவில் கலந்துகொண்ட மந்திரி பக்தவத்சலத்துக்கு மந்திரம் ஓதி வரவேற்பு கொடுக்கப் பட்டது.

**-செய்தி.**

மேற்படி கோயிலில் ஆஞ்சனேயர் விக்ரகம் இல்லையோ என்று சந்தேகிக்கிறோம்.

**-ஒரு சந்தேகி.**

★

ரஷ்யாவில் பழைய பிரதமர் மாலன்காவுக்கு தற்போது சிப்பந்தி வேலை கொடுக்கப்பட்டுள்ளது.

**-செய்தி.**

மாயப்ரபஞ்சமே! வாழ்க்கை அநித்யம்! பதவி அநித்யம்! படாடோபம் அநித்யம்! இது சத்யம்!

**-ஒரு வேதாந்தி**

★

பள்ளிக்கூடத்தில் ஈ. வே. ரா. படம் வைக்க, சென்னை சர்க்கார் அனுமதி தந்துள்ளது.

**-செய்தி.**

காலம் மாறிப் போச்சு!

**-பழமொழி.**

★

தி.மு. கழகத்தவர்கள்பேச்சை விற்றுப் பணம் சம்பாதிக்கிறார்கள்.

**-ஒரு காங்கிரஸ் பெண் எம். எல். ஏ.**

பேச்சைத் தானே விற்கிறார்கள், காங்கிரஸ்காரர்களைப் போல் தன்மானத்தை விற்றுவிடவில்லையே!

**-ஒரு மத்தியஸ்தர்.**

★

கம்யூனிஸ்டு ஆட்சியை எதிர்த்து சீனாவில் புரட்சி.

**-செய்தி**

சீனாவில் தானே! நல்லவேளை! கேரளத்தில்தான் புரட்சியோ என்று பயந்துவிட்டேன்.

**-ஜீவானந்தம்.**

★

காங்கிரஸ் கட்சியுடன் தி. மு. கழகத்தவர்கள் கொஞ்சுகிறார்களே!

**-ஈ. வே. ரா.**

மாமியார் உடைத்தால் மண் குடம்; மருமகள் உடைத்தால் பொன் குடம்!

**-பழமொழி**

★

சென்னையில் சர்க்கார் பஸ்கள் மோதி விபத்து.

**-செய்தி**

சர்க்கார் பஸ்கள் ஓடிக்கொண்டிருக்கும்போதே விழுந்துவிடுகின்றனவே, மோதிக்கொண்டால் கேட்கவா வேண்டும்?

**-ஒரு பஸ் பிரயாணி.**

## "தென்றல்"

(உள் நாடு)

| | |
|---|---|
| ஆண்டுச் சந்தா | ரூ. 7—50 |
| ஆறு மாதம் | ரூ. 3—75 |

(வெளி நாடு)

| | |
|---|---|
| ஆண்டுச் சந்தா | ரூ. 10-50 |
| ஆறு மாதம் | ரூ. 5-25 |

## கவிதைப் பெண்

— 12ம் பக்கத் தொடர்ச்சி —

ஏற்றிப் பேச நாலுபேர்கள் உள்ள அறிவைப் பெற்றவன். அழகான உருவம். கண்ணாடியில் அந்த எழில் அவனுக்குத் தெரியவில்லை. மனதின் குறை தெரிந்தது. இல்லாத புதுமைகளையெல்லாம் கற்பனைகளில் அழகாக்கி அவன் வரைந்த காகித அடுக்குகள் அவன் எதிரே இருக்கின்றன. எல்லாம் பொய்யின் எழுத்துக்கள்.

ஒரு உண்மை இப்பொழுது கெஞ்சி...நிற்கிறது. கண் திறந்திருக்கிறது. மனம் திறந்திருக்கிறது. நினைவு விரிந்து கிடக்கிறது. அந்த அழகு-அந்தக் கண்ணீர்-அந்த இரங்கலின் வேண்டுகோள்கள்......

எப்படி பதில் சொல்வது?

அவன் எழுந்து கண்ணாடியின் முன் நின்றான். முழு உருவம் தெரிந்தது. தலையின் கலையாத முடி அமைப்பின் முன்புறம் நரை ஓடிய குலைவு. கண்களைச் சுற்றி கருவளையம். மீசையின் டசசை தெரிய, நன்றாக ஒழுங்குபடுத்திய முகம்......அழகன் தான்!

அழகன் அவனை நம்பிய அந்த இனிய கவிதைக்கு எப்படிப் பதில் சொல்வது? அவளது நல்ல பதிலுக்காக வாழ்வுபூராவும் காத்திருக்கத் தயாரான ஒரு பெண். அவன் கலை அவளைக் கவர்ந்திருந்தது. அவனது எழுத்துக்கள் அவளுக்குப் புதுப் புதுக் கனவுகளைத் தந்திருந்தன. அதனாலேயே, "வாழ்ந்தால் இந்தக் கலைஞனோடு வாழ்வது!' என்று விரதம் பூண்டாள் அந்த முறைக்காரி!

"இப்படியே பேசாமல் இருந்தால் வயசென்ன குறையுதண்ணு நெனைப்பா? அந்தப் பொண்ணுக்கும் ஒரு வழி சொல்லணுமே?" இது அவன் சகோதரரின் கடமை உணர்த்துதல்.

"எனக்கு அந்தப் பெண் வேண்டாம்!"

"இது நல்ல கூத்தா இருக்கே...அவளுக்கென்ன குறை?"

"குறை எனக்குத்தான்" என்று வாயில் வந்த வார்த்தைகளை அவன் வெளியே சொல்லவில்லை.

"நான் நாள் பார்த்திட்டேன். அதையும் இதையும் சொல்லி நாளைக் கடத்த வேண்டாம்!"

தீர்மானிக்கப்பட்ட விஷயத்திற்கு சகோதரரின் முன் எதிர் அபிப்பிராயம் சொல்ல சக்தியற்றுப் போனான் அவன்.

"அத்தான்! கடைசியில் நான் தானே வெற்றி பெற்றேன்." என்று எக்காளமிட்டு வெட்கிக் கொண்டு ஓடிற்று அந்தக் கவிதை ஒழுக்கு!

"நீ தோல்வியுற்றாய்." என்று மனதில் நினைத்தான், அவன்.

★

திருமணமாயிற்று. வாழ்வு தொடங்கிற்று. ஆரம்பத்தின் நாட்கள் புதுமையாகக் கடந்து போயின. குறைபாடுகள் ஆசையின் வேகத்தில் மறைந்து கிடந்தன.

நீலா, அவனுக்காகப் பாடினாள். அவன் தன் குறையையும் மறந்து அதில் கலந்தான். ஒருவேளை தனக்குக் குறையொன்றியிருந்தது ஒரு பிரமையோ என்று கூட அவன் மயங்கினான். "அத்தான் என்னை ஏமாற்றப் பார்த்தீர்களே, கடைசியில் நான்தானே வெற்றி பெற்றேன்!" என்று அவள் அடிக்கடி சொன்னாள். அவனும் அவள் வெற்றியை மனப்பூர்வமாக ஒப்புக்கொள்ள வேண்டியிருந்து.

ஆனால்...—

நாட்களின் சுழற்சியில் அந்தப் புதுமை குன்றிற்று. அவன் அடிக்கடி பாடுவதை நிறுத்தினாள். ஒரு சோகம். ஒரு பொறுமலின் சோக பாவம்...அந்த மற்ற தொலைவில் எதையோ எதிர் பார்க்கும் சிந்தனை எல்லாம் நீலாவிடம் வந்து குடி கொண்டன.

இரவுகளில் சோர்வின் அனுபவங்களைச் சந்தித்த அவனுக்கு உண்மை புலனாயிற்று. அந்தக் கவிதையின் ஆவேச நாட்களில் மறைந்திருந்த குறை-புதுமை பழமையானபோது வெளிப்படத் துவங்கியிருக்கிறது.

அவளுக்கு அவன் சோக நிழலானான். அவளைக் கவர்ந்த அவனது கலை அவளுக்குப் பொய்யாயிற்று. வெறும் பொய்களின் எழுத்துக்கள். ஆண்மையற்ற எழுத்துக்கள்.

அந்தக் கவிதை, ஏக்கத்தின் அடிகளாயிற்று. பிறகு மெல்ல சூன்யத்தின் வரிகளாயிற்று. பிறகு...பிறகு...அந்தக் கவிதையின் ஒழுக்கு திரும்பிற்று. புறப்பட்ட மலைமுகப்பிற்கே திரும்பி ஒழுக முயற்சித்து தோல்வி கண்டது, அந்த கவிதையின் ஒழுக்கு. ஆமாம். நீலா வாழாவெட்டியானாள்! ★



## ஆசிரியருக்குத் தோழருக்கு

ஐயா,

'ஆர். ஆர். கே. டேலர் இலங்கை தி. மு. க. பொறுப்பாளர்,' என்ற ஒப்பத்துடன் இலங்கை திராவிட முன்னேற்றக் கழகத்தின் அரசியல் அபிப்பிராயத்தைப் பிரதிபலிக்கின்ற முறையில், சில பத்திரிகைகளில் பிரசுரமாகியிருக்கும் அறிக்கையைக் கண்ணுற்று வருந்துகிறோம்.

ஆர். ஆர். கே. டேலர், இ. தி. மு. க. பொறுப்பாளர் அல்லவாதலால், அவ்வறிக்கைக்கு இலங்கை தி. மு. க. தனது பலத்த ஆட்சேபணையையும் கண்டனத்தையும் தெரிவிக்கிறது.

திரு. டேலர் கடிதத்திலிருந்து, 'தமிழரின் உரிமைப் போராட்டத்தை இ. தி. மு. க கடைசி நேரத்தில் காலை வாரி விடுகிறது' என்ற ஒரு தவறான எண்ணம் உண்டாக இடம் ஏற்படுகிறது.

திரு. டேலர் என்பாருக்கும் இ. தி. மு. க. விற்கும் எவ்விதத் தொடர்பும் கிடையாது. மேலும் இலங்கை தி. மு. கழகத்திற்கும் தமிழரசுக் கட்சிக்கும் கடந்த ஒன்பதாண்டுக் காலமாக இருந்து வரும் தோழமையையும் நல்லுறவையும் நாடறியும்.

தமிழரசுக் கட்சியின் 'ஆகஸ்டு அறப்போர்'க் கோரிக்கைகளில் சமஷ்டி நீங்கலாக ஏனையவற்றை இலங்கை தி. மு. கழகம் கொள்கையளவில் ஏற்றுக்கொண்டுள்ளது. என்றாலும் 'ஆகஸ்டு அறப்போரு'க்கு இலங்கை தி. மு. கழகம் தனது பேராதரவை எந்தத் துறையில் அளிக்க முடியும் என்பதை அண்மையில் கூடவிருக்கும் மத்திய செயற் குழுவில், விரிவான பரிசிலனைக்குப்பின் தீர்மானிக்கப்படவிருக்கிறது. அதன் பின்னரே, 'ஆகஸ்டு அறப்போர்,' குறித்து இலங்கை தி. மு. க. தனது முடிவான கொள்கையை விளக்கி அறிக்கை வெளியிட முடியும் என்பதை நினைவூட்டுகிறோம்.

இறுதியாக, திரு. டேலர் என்பவர் வெளியிட்டிருக்கும் அறிக்கைக்கும், இலங்கை திராவிட முன்னேற்றக் கழகத்திற்கும் எவ்வித சம்பந்தமும் கிடையாது என்பதையும் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

அன்புள்ள,

**இரா. அதிமணி,**
துணைப் பொதுச்செயலாளர்,
இலங்கை தி. மு. கழகம்.

## நூல் நயம்

### சுரங்கம்

பிரெஞ்சு மேதை எமிலி ஜோலா எழுதிய, உலகத்துச் சிறந்த நாவல்களில் ஒன்றாக மதிக்கப்படும் 'ஜெர்மினலி'ன் மொழி பெயர்ப்பே சுரங்கம்.

நிலக்கரிச் சுரங்கம் ஒன்றில் உழைக்கும் தொழிலாளர்களின் சகலவிதமான அரசியல் கருத்துக்களையும், பிரச்சினைகளையும், போராட்டங்களையும், நடைமுறை வாழ்க்கையையும், காதல் துறைகளையும் நூல் விவரிக்கிறது.

அதுவரை அமைதியாகத் தனது அலுவலில் ஈடுபட்டிருந்த வாரூக்ஸ் சுரங்கமும், அங்கு பணியாற்றிக்கொண்டிருந்த தொழிலாளர்களும் எட்டியனுடைய வருகைக்குப் பின் சுறுசுறுப்படைகின்றனர். அனைவரும் ஒரே அணியில் திரள்கின்றனர். சுரங்க முதலாளிகளின் கூலிக் குறைப்பையும், வேலைப் பளுவையும் எதிர்த்து வேலை நிறுத்தம் நடைபெறுகிறது. அதனால் பல சிக்கல்கள் உருவாகி விடுகின்றன. ஆத்திரம் கொண்ட தொழிலாளர்களால் சுரங்கப் பொருள்கள் சூறையாடப்படுகின்றன. தொழிலாளர்கள் சுடப்படுகின்றனர். வேலை நிறுத்தம் நீடிக்கிறது. பசியும் பட்டினியும் அவர்களோடு நெருங்கிய உறவு கொள்கின்றன. அதுவரை வழி காட்டியாக மதிக்கப்பட்ட அவன், துரோகி என்று தூற்றப்படுகிறான். சுரங்கம் அராஜகவாதி ஒருவனால் தகர்க்கப்படுகிறது. அந்த விபத்தில் சிக்கிக் கொண்டவர்களில் அவனும் ஒருவன். உடல் நிலை தேறி வெளிவரும்போது அவனுக்கு அங்கு வேலை இருக்கவில்லை. அதோடு அவன் முன்னரே முடிவு செய்தபடி அரசியல் வாதியாகத் தனது வாழ்க்கையை அமைத்துக் கொள்ள பாரிஸ் செல்கிறான். சுரங்கம் திரும்பவும் அமைதியில் ஆழ்ந்து விடுகிறது. அதே வேலைப் பளு, அதே கூலி குறைப்பு...

கதையின் மூலம் தொழிலாளர் வாழ்க்கை, இயந்திர நாகரிகம் முதலாளித்துவ சமுதாயத்தில் படைத்திருக்கும் அலங்கோலமான வாழ்க்கைச் சீரழிவு இவற்றையும் மனித மனத்தில் கணத்துக்குக் கணம் நடைபெறும் போராட்டங்களையும் தெளிவாக உணர முடிகிறது. பாத்திரங்கள் பலரும் உலகை ஆட்கொண்டிருக்கும் தத்துவங்களின் வாரிசுகளாக அமைக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

விலை. ரூ. 3-0-0

மொழி பெயர்ப்பு:
எஸ். பி. இராமச்சந்திரன்

கிடைக்குமிடம் :
பிரேமா பிரசுரம், சென்னை 24.



## வாழும் மொழியில்...

— 2ம் பக்கத் தொடர்ச்சி —

சொற்பொழிவாற்றி வந்தார். தொல்காப்பியரின் எட்டு மெய்ப்பாடுகளையும் வடமொழியாளரின் ஒன்பது சுவைகளுடன் ஒப்பிட்டு ஆராய்ந்தார். மெய்ப்பாடுகள் அல்லது சுவைகளில் தலைசிறந்தது பரிவு அல்லது கருணைச்சுவையே என்று தக்க சான்றுகள் காட்டினார். ஆனால் சுவை ஆராய்ச்சியிலிருந்து அவர் திடுமெனக் கடவுள் ஆராய்ச்சிக்குக் குதித்தார். கடவுள் கருணை உருவினராய்ப் பக்தர்களால் சிறப்பிக்கப்படுவதன் காரணம் இக்கருணைச் சுவையின் தலைமையை உணர்த்துவதாகும் என்று முடித்தார். வடமொழியில் எழுத்தாலும் சொல்லிய பொருளாலும் கருணம் கருணையினின்று வேறுபட்டது என்பதை அவர் அறியவில்லை. இதை ஒருவர் சுட்டிக்காட்ட நேர்ந்தபோது, தம் வடமொழி அறிவைப் பெருமையுடன் பகட்டிக் காட்ட வந்த எழுத்தாளர் வெட்கித் தலை குனிய நேர்ந்தது.

இரண்டாவது சான்று, நாம் எடுத்துக்கொண்ட செய்திக்கு இன்னும் பொருத்தமுடையது. 'ஈசுவரன்', 'சாசுவதம்' முதலிய வடமொழிச் சொற்களை நாம் இங்கே எழுதியபடியே தமிழ் எழுத்துக்களில் எழுதுவதுதான் கலப்புத் தமிழாளரிடையேகூட மிகப் பெரும்பாலான வழக்கு. இது நன்னூல் முதலிய இலக்கண ஏடுகளின் வடமொழி ஆக்க விதிகளின்படி அமைந்தது. தமிழிலுள்ள ஒரு 'ச'கரம், வடமொழியிலுள்ள நான்கு 'ச'கரங்களுக்கு மட்டுமின்றி இடை எழுத்துக்களின் இறுதியாகச் சேர்க்கப்பட்ட 'ச'கரத்திற்கும், இறுதி வரியில் சேர்க்கப்பட்ட இரு 'ச'கரத்திற்கும் (ஷ, ஸ) பொதுவாகும். இலக்கண விதிப்படி வடமொழிச் சிறப்பு எழுத்துக்களைப் பொது எழுத்தாக்கி ஒலிமயக்கங்களைத் தமிழுக்கு ஏற்றவாறு இடையே உயிர் எழுத்துக்கள் சேர்த்து இத்தமிழ் ஆக்கங்கள் அமைந்தன. 'ஈசுவரன்', 'சாசுவதம்' ஆகிய இரு சொற்களிலும் இரண்டாம் எழுத்தாய் வரும் 'ச'கரம் வடமொழியின் ஈராகிய 'ச'கரமேயாகும். ஆனால் சமஸ்கிருதப் பற்றாளர் இதனை வடமொழி மரபுக்கியைந்த திருத்தமாக எழுத முற்படும் முயற்சியில் பெரும் பிழைகளும், குளறுபடிகளும் சூழ்கிறார்கள்.

திருத்தம் நாடும் வடமொழிப் பற்றாளரில் ஒரு சாரார் 'ஈசுவரன்', 'சாசுவதம்' என்பதற்குப் பதிலாக, இடையிலே தமிழ் மரபுக்குரிய உயிர் சேர்க்காமல் 'ஈச்வரன்', 'ச்ர்ச்வதம்' என்று எழுதுகின்றனர். இதனால் ஏற்படும் தவறுகள் பல. முதலில் தமிழ் மரபுக்கு ஒவ்வாத மெய்மயக்கம் இங்கே ஏற்படுகிறது. அதுமட்டுமன்று, தமிழ் மரபில் எழுதும்போது வடமொழியின் சகர ஒலி மரபு கெடவில்லை. இங்கே வடமொழியின் ஒலி மரபு கெட்டு, 'ச'கரம் வடமொழியில் முதற் 'ச'கரம் போல ஒலிக்கிறது. இதனால் ஏற்படும் மற்றொரு பிழை உண்டு. அது தமிழ் மரபு கெடுப்பது மட்டுமன்று, வடமொழி மரபும் கெடுப்பது. முதற் 'ச'கரமும் 'வ'கரமும் இணைந்த மெய்மயக்கம் எப்படி தமிழ் மரபுக்கு அயலானதோ அப்படியே, வடமொழி மரபுக்கும் அயலானது. வடமொழியிலும் அவ்விரு மெய்களும் மயங்குவதில்லை. ஆகவே, இத்திருத்தம் இரு மொழிகளின் எழுத்து, ஒலி, மரபு ஆகிய மூன்றையும் பிழைபட வைத்து இரு மொழிக் கொலையாகிறது.

இன்னும் ஒரு சாரார் பொதுவெழுத்தாகிய இத்தமிழ் 'ச'கரத்திற்குப் பதிலாக புதிதாக இப்போது புகுத்தப்படும் எழுத்துக்களில் ஒன்றான ஈற்று வரியின் இரண்டாவது 'ச'கரத்தை (ஃச = ஸ) பயன்படுத்தி (ஈஸ்வரன், சாஸ்வதம் என்று) எழுதி விடுகிறார்கள். இங்கே தமிழ் மரபும் தமிழ் இலக்கணமும் தவறுவதுடன் தவறு நிற்கவில்லை. வடமொழியின் மூல எழுத்தும், ஒலியும், மரபும் யாவும் தவறி எழுத்து மாற்றமே ஏற்பட்டு விடுகிறது. தமிழக வடமொழிப் பற்றுளர் என்று கூறிக்கொள்ளும் இவர்கள் திருத்தத்தை உண்மை வடமொழிப் பற்றுடைய வடவர் கண்டால், ஒன்று எள்ளி நகையாடுவர்; அல்லது வடமொழிக் கொலை கண்டு சீறுவர்.

'சங்கரன்' என்ற வடமொழிச் சொல் இடையின ஈற்றெழுத்தாகிய 'ச'கரத்தையே முதல் எழுத்தாக உடையது. இது சைவர் வழிபடும் முழுமுதற் கடவுள் பெயராகிய சிவபெருமானைக் குறிப்பது. மேற்குறிப்பிட்ட இரண்டாவது வகைத் திருத்த முறைப்படி புதிய புகுத்திட்டு 'ச'கரங்களில் ஒன்றை வழங்கி அதைத் தமிழில் எழுதினால், மேற்குறிப்பிட்ட 'ஈசுவரன்', 'சாசுவதம்' ஆகிய சொற்களில் ஏற்படும் எல்லாப் பிழைகளுடன் பொருட் பிழையும், பொறுக்க முடியாத கடவுள் நிந்தனைச் சிற்றமும் ஏற்பட்டு விடுகிறது. ஏனெனில் மூல வடமொழியிலும் பொது எழுத்துடன் எழுதப்படும் தமிழ் வடிவிலும் இரண்டிலும் அது சிவபெருமானைக் குறிக்க வழியுண்டு. மாறுபட்ட புதிய புகுத்திட்டு எழுத்துடன் எழுதப்படும் திருத்த வடிவிலோ, அது தகாக் கலப்பினப் பிறவி அல்லது கீழ் மகன் என்ற பொருளை மட்டுமே தரமுடியும். இது பெரும் பொருட் பிழைபாடு மட்டுமல்ல, சமயவாணர்களைப் பெரிதும் புண்படுத்தும் செயலும் தெய்வ நிந்தனையுமாகும்.

(வரும்)

# தமிழிற் பிறமொழி!

## 'தமிழ் நாடு' கண்டனம்

பிறமொழிச் சொற்களைத் தமிழில் தாராளமாகப் பயன்படுத்திக் கொண்டு வருவதே, நம் தாய்மொழியை வளர்ப்பதற்கு முக்கியமான வழியாகும் என்று சிலர் கூறுகிறார்கள். அண்மையில்கூட, நமது கல்வி அமைச்சர் திரு. சுப்பிரமணியம், இக்கருத்தை வற்புறுத்தியிருக்கிறார். சென்னையில் நடைபெற்ற கம்பர் கல்விக் கழகக் கூட்டத்தில் பேசும்போது "பிறமொழிகளிலிருந்து, சொற்களைத் தேடி எடுத்து நம்முடையதாக்கிக் கொள்ளவேண்டும். பிற மொழிச்சொற்களைச் சேர்த்துக்கொள்வதால், தமிழ்மொழி சிதைந்து விடும் என்று சிலர் நினைக்கின்றனர். இவர்கள் தமிழ் வளர்ச்சிக்குத் தீங்கு செய்பவர்கள் என்றே நான் கருதுகிறேன்"— என்று அவர் கூறியிருக்கிறார். எளிய, தூய, இனிய தமிழ்ச் சொற்கள் இருக்கும்போது, அவற்றைப் புறக்கணித்துவிட்டு, கடினமான பிற மொழிச் சொற்களைப் பயன்படுத்தி வருவது தமிழ் வளர்ச்சிக்குத் துணை செய்வதாகாதென்ற கருத்தைத் தமிழ் மொழியின் இயல்பை அறிந்தவர்கள் மறுக்கமாட்டார்கள். எடுத்துக்காட்டாக. தமிழில் புகுத்தப்பட்ட சில பிற மொழிச் சொற்களைக் குறிப்பிடலாம். "மொழி" என்ற சொல்லைப் "பாஷை" என்றும், "நூல்" என்பதைப் "புஸ்தகம்" என்றும், "கருத்து" என்பதற்கு மாறாக "அபிப்பிராயம்" என்றும் சிலர் கூறுகிறார்கள். "வணக்கம்" என்ற தமிழ்ச் சொல் "நமஸ்காரம்" எனவும், "தலைவர்" என்பது "அக்கிராசனர்" என்றும், "பேச்சு" என்பது "பிரசங்கம்" என்றும், "நன்றி கூறல்" என்பது "வந்தனோபசாரம்" என்றும் வெவ்வேறாக வழங்குகின்றன. இவற்றைப் போன்ற ஏராளமான பிற மொழிச் சொற்கள் தமிழின் இனிமையையும், தூய்மையையும் மாற்றியிருக்கின்றன என்று கூறுவது மிகையாகாது. இதனால். பிற மொழிச் சொற்கள்மீது வெறுப்புக் கொள்வதாக எண்ணுவது தவறாகும். பெருஞ் செல்வம் உடையவர் பிறரிடமிருந்து கடன் வாங்கவேண்டிய தேவையில்லை என்று கூறுவது, மற்றவர்கள்மீது வெறுப்பு உணர்ச்சியை எப்படித் தூண்டுவதாகும்? 'கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே முன் தோன்றி மூத்த குடி' மக்களாகிய தமிழர்களின் பன்னெடுங் காலப் பழமை மொழியின் மாபெரும் இலக்கியங்கள், எழுத்தேடுகள், கல்வெட்டுக்கள் முதலிய பல்வேறு கருவூலங்களில், வாழ்க்கைக்குத் தேவைப்படும் கணக்கற்ற சொற்கள் காணப்படுகின்றன. இவற்றில் ஏராளமானவை உலக வழக்கழிந்து போகும்படி செய்யப்பட்டதால்தான் பிறமொழிச் சொற்கள் தமிழில் புகுந்து கொண்டன. பிறமொழிச் சொற்கள் பயன்படுத்தப்படுவதால் தமிழுக்கு என்ன தீங்கு ஏற்பட்டது, என்று வினவலாம். ஒவ்வொரு மொழிக்கும் ஒரு தனி இயல்பு, மாண்பு, சுவை இருக்கிறதென்பது மொழி ஆராய்ச்சியாளர்கள் கண்ட உண்மை; பிறமொழிக் கலப்பால், அத்தனி இயல்பு மாசுபடுகின்றது; தூய்மை சீர்கேடடைகின்றது. தமிழ்மொழியும், பிறமொழிக் கலப்பால், தன்னுடைய ஒப்பற்ற மேன்மைச் சிறப்பை இழந்ததென்பதற்குச் சான்றுகள் கூறவேண்டியதில்லை. இன்றுள்ள இழிநிலையே தக்க சான்று. இந்நிலை திருந்தவேண்டும் என்பதே தமிழ் மறுமலர்ச்சியாளர்களின் வேண்டுகோள். இதனால், எக்காலத்தும் பிறமொழிச் சொற்களைப் பயன்படுத்தவே கூடாது என்பது அவர்களுடைய கொள்கையல்ல. தமிழில் பொருத்தமான சொற்கள் கிடைக்கவில்லையென்றால், பிறமொழிச் சொற்களை நன்றாகப் பயன்படுத்தலாம். இதை யாரும் மறுக்கவில்லை. பெட்டகத்தேயுள்ள பெரும் பொருளை உணராமல், வீடுதோறும் சென்று ஏற்றுண்ணும் வழக்கம் தேவையற்றதோடு, தாயகத்தின் பண்டைச் சிறப்பைப் பாழ்படுத்துவதாகும் என்று கூறுவது தவறாகுமா? ★

# கவிதைப் பெண்

★

-: ஆ. மாதவன் :-

இதயம் கவரும் ஒரு கவிதை போல அவள் அவன் முன் அமர்ந்திருந்தாள். அவன் நினைத்தான்: "இந்தப் பெண்-அழகான நீண்ட கரிய கூந்தலுள்ள இந்தப் பெண்-கூந்தலை இரண்டு வளையங்களாகப் பின்னிச் சொருகும் அழகுக் கலை தெரிந்த இந்தப் பெண், வெள்ளை நிலா நெற்றிக்கு வால்முளைத்த நட்சத்திரப் பொட்டணிய வேண்டுமென்று தெரிந்த இந்த அழகான பெண் என் இதயத்தில் அவளுக்கொரு இடம் வேண்டுமென்று இரங்கி நிற்கிருளே? காண்பவர் எல்லோர் இதயத்திலும் அவள் வேண்டுகோள் இன்றியே இடம் பிடிக்கலாமென்ற இந்த அழகான பெண், என்னிடம் இறங்கி நிற்கிருளே?"

அவன் நினைவுகள் துண்டுபட்டன.

"இன்னும் நான் எவ்வளவு காலம் வேண்டுமாயினும் உங்களுக்காகக் காத்திருக்கிறேன். அத்தான்!"—கவிதை பேசிற்று.

"அப்படி என்னை அழைக்காதே நீலா!"

"நான் அதற்கும் அருகதையற்றவளா?"

"நான் அதற்கு அருகதையற்றவன்!"

"அத்தான்!"

கவிதை மீண்டும் அந்த அபஸ்வரத்தையே ஒலித்தது. "அத்தான்" என்ற அந்த சொல்லே அவன் நெஞ்சில் முள்ளாகக் குத்திற்று. ஆறு ஆண்டுகளுக்கு முன்னால் அந்த உறவு ஏற்பட்ட நிமிடத்தை அவன் சபித்தான். மனம் புகைந்து வெறுத்தான். ஆமாம். புகை. அந்த மண மண்டபத்தில் வைதிகத்தின் அத்தனை அலங்கோலங்களும் குமைய ஒரு பெண் அவனது சகோதரனோடு பிணைக்கப்பட்டாள். அந்த பிணைப்பு இந்தப் பந்தத்தை ஏற்படுத்தி வைத்தது. அத்தான்! புதிய பெண்ணின் தங்கை அவள். நீலா. நன்ருகப் பாடும் குரலுடையவள் நன்ருகப் பாடிக் காட்டவும் செய்தாள். 'இவள்-இவனுக்காக' என்று எல்லோர் கண்களும் சம்மத முத்திரையும் இட்டன. அப்படி அவள், அவனுக்கானுள், உறவின் பிணைப்பில்!

ஆறு ஆண்டுகள் வெறும் பம்பரவிளையாட்டாகச்சுழற்றிவிட்டு அவன் எல்லா உரிமைகளையும் வைத்துக் கொண்டு, "ஏற்றுக் கொள்" என்று பெண்மைக்கே இயல்பான வெட்கத்தையும் விட்டுக் கேட்கிருள்......அந்தப் பாட்டு-வெறும் பாட்டு, நல்ல அழகான மெல்லிய நீரருவியின் சலசலப்பு போன்ற நடையின் நளினமுடைய கவிதையாக மாறிற்று. காலம் அந்த மாற்றுப் பணி செய்திருந்தது.

அவன் மௌனமாக அமர்ந்திருந்தான்.

"உங்கள் நல்ல பதிலுக்காக இன்னும் காத்திருப்பேன்-என்றும் காத்திருப்பேன்." என்று சொல்லி விட்டு அந்தக் கவிதை ஒழுகிப் போயிற்று......

......இன்னும் அந்த ஒழுக்கு அந்த அறையில் சலசலப்பை ஏற்படுத்துவதற்காக இழைந்து ஒழுகிவரும். அவன் அமர்ந்திருந்து எண்ணினுன்......வற்ருத நீரருவியை எப்படி அணை தேக்கித்திருப்பிவிடுவது? அவன் அமர்ந்திருந்து எண்ணினுன்...... இதயம் நிறைய தாகம். வறண்ட தாகம். ஆவல் மிக்க தாகம். எனினும் அந்த நீரருவி குளிர்ச்சியின் சலசலப்போடு இதயத்தில் வந்து பாய இயலாது. அவன் அமர்ந்திருந்து எண்ணினுன்......

எண்ணற்ற கனவுகளின் பிறப்பிடமான அந்த அறை. அங்கேதான் எல்லாம் நிகழுகின்றன. ஆறு வருடத்து நிகழ்ச்சிகளுக்கும் அரங்கு அதுதான். வெள்ளை பூசிய சுவர்களில் வரிசையாக மேதைகளின், உலகின் கரை கண்டவர்களின் உருவச் சித்திரங்கள்......கண்ணுடி இருக்கிறது. அதில் எதிர்கால மேதையான அவனது உருவமும் பிரதிபலிக்கும்...பெரிய கண்ணுடி. முழு உருவத்தையும் பிரதிபலிக்கும் கண்ணுடி. முழு உருவம்!

முழு உருவம்......

சின்னப் பருவத்தில்-அந்தக் கவிதைப் பெண் வெறும் வார்த்தைகளின் பாட்டாக இருந்த பத்து வயதில், அவன் கனவில் 'சித்திரம்' தீட்டும் பைத்தியமாக இருந்தான். வெகு கால வறட்சிக்குப் பின்பு வானத்தைப் பொத்துக்கொண்டு மழை பிடித்திருந்தது. மழை. அடை மழை. தீராத மழை இன்றும் தீராது. 'நாளெல்லாம் தீரவே செய்யாதோ?' என்று தோன்றுமளவுக்கு வானத்தைத் தொட்ட மலை முகட்டில் கருமேகங்கள் தேங்கியிருந்தன. அந்தத் தேக்கத்திலிருந்து உதிரும் மழைத் துளிகள்......

மலைகளும் பத்தற்காடுகளும் நிறைந்த அந்த உளர்...செம்மண் மேடுகளை கரைத்துக் கொண்டு மழைநீர் குழம்பாக ஒழுகிக் கொண்டிருந்தது. அந்த சகோதரனின் 'பந்தம்' அப்படி ஒரு மழையின் நாளில் நடந்தது!

அவன் நினைவு அப்படி புதிய வெள்ளப் பெருக்கின் வேகம் போல கலக்கிக் கொண்டு புறப்படுகிறது......

நீலா. அந்தப் பாடும் பெண். சின்னஞ் சிறுமியாக இருந்தாள். மூக்கின் இருபுறத்திலும் மூக்குத்திகள்...மலராத கண்கள்... வகுத்துத் தீட்டாத உதடுகள்... மெல்லிய செம்பட்டைக் கூந்தல் அன்றும் இரட்டை வளையப் பின்னல்தான். நெற்றி நடுவில் பெரிய சாந்துப் பொட்டிடுவாள். பாவாடைப் பருவத்தின் அத்தனை சிறுமைகளும் பண்புகளாக...சதா அவனிடம் வந்து கூத்தடிப்பாள். கனியை விழுங்கியபின்பு விதையைப்பதம் பார்க்கும் அனுபவங்களுடன் கனவு காணும் அவன், பிள்ளை விளையாட்டாக அதை மதித்தான். அவள், அவன் முன்னிலையிலேயே இதழ் பரப்பி மலர்ந்தாள். மலர்ந்து மணம் பரப்பினுள். பாட்டின் கரடுமுரடான எடுப்புகள் இழைந்து இழைந்து உள்ளத்தின் உணர்ச்சி வேகத்திலிருந்து வெளியாகும் இனிய கவிதை போலானுள், நீலா.

அவள்......

ஒரு ஓரத்தில் சிவப்புக் கரையும், மறுபக்கத்தில் பச்சைக்கரையும் அமைந்த சின்ன வேட்டியும் அரைக்கை உடுப்பு மணிந்து; புத்தகப் பையைக் கக்கத்தில் கோணலாக வைத்துக்கொண்டு பள்ளிக்குப் போன பருவத்திலிருந்து விளைந்து முற்றிய அனுபவங்கள்; ஒன்று, இரண்டு மூன்று......எண்ணிக்கை மறந்து போன அனுபவங்கள்...அப்படி பிறப்போடு வளர்ந்த வெறி, மலர்ந்து நின்று உரிமைகொண்டாடும் ஒரு எழிலின் முறை வந்தபோது, இருள்மண்டி விட்டது...பகலில், எரிந்து உதிர்ந்து இரவு வந்தபோது எரிய எண்ணெயில்லாத ஒரு நிலையில் அவன்....

— 10-ம் பக்கம் —



ஆசிரியர், அச்சிடுபவர், வெளியிடுபவர் கண்ணதாசன், ஏ. எல். எஸ். அச்சகம், 2-127, மவுண்ட் ரோடு, சென்னை-6. தமிழ்நாடு.

